# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3 விளைச்சல் : 27 திருவள்ளுவர் ஆண்டு 2053 ஆகத்து–2022


## உள்ளே...













# நெசவுத்துறை கலைச்சொற்கள்

Art silk – செயற்கைப் பட்டு
Bleaching workshop– வெளுப்புப் பட்டறை
Calico printing – துணி அச்சீடு
Carpet wool – விரிப்புக் கம்பளி
Cheese dyeing – நூற் கூம்பு உருளை
Cloth roller – துணி உருளை
Cross dyed effect – குறுக்கு வண்ண விளைவு
Design roller – வடிவ அச்சுருளை
Drum winding machine – உருளைச் சுற்று இயந்திரம்
Dyeing method – வண்ணமிடு முறை
Fine wool – மென் கம்பளி
Float stitch – மிதப்புத் தையல்
Ginning – பருத்தி விதைப் பிரித்தல்
Hand knitting – கைப்பின்னல்
Hand pick rope – சுங்குக்கயிறு
Honey comb – தேன்கூடு நெசவு
Leg pedal loom – கால்மிதித்தறி
Lint doctor – தூசு வழிப்பான்
Mat loom – பாய்த்தறி
Mat weave – பாய் நெசவு
Opening machines – பஞ்சு பிரிக்கும் இயந்திரங்கள்
Peg plan – மிதி இயங்கும் முறை
Pit loom – குழித்தறி
Pupa – கூட்டுப்புழு
Silk handloom – பட்டுக்கைத்தறி

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 (ஆடி)
ஆகத்து – 2022

ஆசிரியர் : முனைவர் **கோ.விசயராகவன்**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் **வே.கார்த்திக்**

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
கட்டணமில்லா அலைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Toll free : 14469
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com

# தமிழே பிறமொழிகளின் தாய்

உலகின் முதன்மொழி மற்றும் மூத்தமொழி தமிழ்தான். தமிழ் இந்தியப் பெருங்கண்டத்தின் தொன்மைமிக்க பெருமொழி. அது பிறமொழிகளைச் சார்ந்து உருவான மொழி அல்ல. இனக்குழுக்களின் ஆதிமொழியாகவே தோற்றம் பெற்ற தொல்மொழி. மொழியின் தொன்மத்துக்கான அடிப்படைச் சான்று எழுத்து வடிவமே. மக்கள் தங்கள் கருத்துப் பரிமாற்ற ஒலிப்புகளை எழுத்தால் எழுதித் தொடங்குவதே மொழியின் ஆதி ஆவணம் ஆகும். இன்றைய தமிழ் வரிவடிவம் தொட்டுக் கோலெழுத்து, பல்லவக் கிரந்தம், வட்டெழுத்து, தமிழி, சிந்து சமவெளி வரிவடிவம் எனத் தொடரும் ஆய்வுகள் தமிழின் நெடிய பயணத்தை நமக்குக் காட்டுகின்றன. தமிழகம் அரசாட்சியிலும் வணிகத்திலும் சிறந்து விளங்கிய நாடு ஆகும்.

"திரைகடல் ஓடியும் திரவியம் தேடு" என்பது தமிழரின் கொள்கையாக இருந்தது. வணிகத் தொடர்பின் மூலமாகத் தமிழர்தம் நாகரிக மொழிப் பண்பாட்டுப் பரவல் பல்வேறு இடங்களில் பரவியது. உலகின் பல்வேறு நாடுகளில் தமிழ் பேசும் மக்கள் வாழ்கின்றனர். சில நாடுகளில் தமிழ் ஆட்சிமொழியாகவும் உள்ளது. கிரேக்கம், இலத்தீன், ஹீப்ரு போன்ற உலகின் தொன்மையான மொழிகளிலும்கூட தூயதமிழ்ச் சொற்கள் பயன்பாட்டில் உள்ளன. இத்தகைய மொழிக்கலப்பு தமிழின் தொன்மையை நமக்குப் பறைசாற்றுகின்றது. தமிழ்தான் பிறமொழிச் சொற்களின் தாயாக விளங்குகின்றது.

மொழியை உயிராக மதிப்பவர்கள் தமிழர்கள். வேறு எந்த மொழிகளிலும் மொழியைத் தன் பெயராய் வைத்துக்கொள்வதில்லை. (தமிழ்ச் செல்வன், தமிழரசி, தமிழ்ச்செல்வி, தமிழ்நிலா, தமிழரசன், தமிழ்வாணன்) பழங்கால மொழிகளான இலத்தீன், எகிப்து, சீனம், பாலி, சமற்கிருதம் போன்றவை தற்போது வழக்குமுறையில் இல்லை. பழைய சீனமொழி அழிந்துவிட்டது. தற்போது பேசும் சீனமொழி மாண்டரின் ஆகும். தொல்மொழிகளில் இன்றும் இளமை மாறாமல் உயிர்ப்புடன் இருக்கும் ஒரே மொழி தமிழ்மொழி ஆகும்.

ஒருமொழி வளர்ச்சியடையக்கூடிய சாத்தியக்கூறுகளை எப்போது கொண்டிருக்குமெனில், அது புழக்கத்தில் இருக்கக்கூடியதாக இருத்தல் வேண்டும். தமிழ்மொழி செவ்வியல் மொழி. ஒரு மொழி செவ்வியல் மொழி என்று அழைக்கப்பட வேண்டுமானால் அது பழைமையானதாக இருக்க வேண்டும். தனித்துவமான மரபைப் பெற்றிருக்க வேண்டும். வேறு மரபில் இருந்து கிளைத்திருக்கக் கூடாது. பெரிய வளமான இலக்கியத் திரட்சியைக் கொண்டதாக இருக்க வேண்டும். தானே முகிழ்த்து மணம் பரப்புவதால்தான் தமிழ்மொழி செம்மொழியாய்ச் செம்மைபெற்று விளங்குகிறது. தமிழ்மொழியின் இலக்கியங்கள் அறம் பாடியவை, இறை வழிபாட்டிலும் இயல்பு வாழ்வைப் பேசியவை. "மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்" என்ற சிந்தனையைக் கொடுத்தவை. உலகில் உள்ள மொழிகளுக்கெல்லாம் மூலமொழி தமிழ்மொழியாகும். பிறமொழிச் சொற்களுக்கு வேர்ச்சொல்லாக இருப்பது தமிழ்தான். தமிழர்களின் பண்பாடு, வாழ்வியல் போன்றவை உலக அளவில் பரவியுள்ளன.

தமிழ்தான் உலகின் முதல்மொழியும் பிறமொழிகளுக்கு மூலமொழியும் ஆகும். இதனைத் தொல் மொழியியல் ஆராய்ச்சி (Linguistic Anthropology) மற்றும் மொழியியல் தொல் ஆராய்ச்சி (Linguistic Archaeology) உட்படுத்துவதன் மூலம் நாம் அறியலாம்.

ஆங்கிலத்தில் path என்பதற்கு way என்கிறோம். அதைத் தமிழில் Path பாதை, Way வழி என்கிறோம். சரி, இச்சொல் எப்படி உருவானது. பாதை என்றால் என்ன? வழி என்றால் என்ன? அது எப்படித் தோன்றும்.. மனிதர்கள், விலங்குகள் என நடந்து அதாவது பாதம் தேயத் தேய உருவானது பாதை. பாதம் + தேய் = பாதேய். பாதேய் என்பதே ஆங்கிலத்தில் Path ஆனது. எத்துணை அழகான வேர்ச்சொல் உருவாக்கம்.

- Cry – கரை (கரைதல் – அழைத்தல்) காகம் கரையும்
- Clay – களிமண்
- Culture – கலைச்சாரம் (கலாச்சாரம்)
- Blare – பிளிறு

இதுமட்டுமல்ல. இலத்தீன், கிரேக்கம், செர்மன் போன்ற மொழிச் சொற்களும் தமிழ் மூலத்திலிருந்து வந்தவை. பின் ஒன்றுடன் ஒன்று கலந்து பல சொற்களை அவை உருவாக்கிக் கொண்டன என ஆய்வாளர்கள் உறுதி செய்கின்றனர்.

"ழ" ஒலிப்பு தமிழ், மலையாளம், மாண்டரின் சீனா ஆகிய மூன்று மொழிகளுக்கு மட்டும் உரியது. 1,500 ஆண்டுகளுக்கு முன் தெலுகு (தெலுங்கு) என்கிற தனிமொழி இல்லை. தமிழ்மொழியின் ஒரு பகுதியே தெலுகு.

"தெள்ளு தமிழ் பாடித் தெளிவோனே" என்று முருகப்பெருமானைப் புகழ்கிறது திருப்புகழ். 1,000 ஆண்டுகளுக்கு முன் கன்னடம், மலையாளம் இல்லை. அம்மா, அப்பா என்ற தமிழ்ச் சொற்கள் இன்றைய நாளில் 200 மொழிகளில் வழங்கப்பட்டு வருகின்றன. இது எப்படி சாத்தியம் என நாம் சிந்திக்க வேண்டும்.

தமிழ்ச்சொற்கள் வடமொழியில் வந்துள்ளமையை மேலை அறிஞர்களான கால்டுவெல் மற்றும் பர்ரோ ஆகியோர் தம் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர். அவற்றில் நீர், மீன், மின் போன்ற சொற்களைக் கூறலாம். அது மட்டுமல்லாது

அனல் – அனலா,

குடம் – குடா,

உலக்கை – உலூகலா,

மயில் – மயூரா,

மலை – மாலா,

முரசு – முரஜா,

எருமை – ஹெரம்பா,

வளை – வலயா

என்ற முறையில் தமிழின் வேர்ச் சொற்களைக் கொண்டு அதே பொருளில் வழங்கப்படுகின்றன.

கிரேக்க நாட்டிற்கும் பழந்தமிழகத்துக்குமான வணிகத் தொடர்பைப் பழந்தமிழ் இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

அரிசி – ஒரைசா,

இஞ்சி – ஜிஞ்சிபெர்,

கருவா – கர்பியன்

எனவும் சொற்கள் புழக்கத்தில் உள்ளன. மேலும்,

Minoan Civiliztion – மீனவன்

Dorian (Sea People) – திரையன்

Terra – தரை

Ophis (Oviya) – ஓவியர் குடி

Bottle – புட்டில்

Athlete – அடலர் ( வெற்றியாளர்)

தமிழ்மொழிக்கும் சப்பானிய மொழிக்கும் பல்வேறு வகைகளில் உறவுண்டு என்று மொழியியல் அறிஞர்கள் கூறுகின்றனர். சான்றாக,

கவ்வு – கமு,

காயல் – காய,

படகு – பசேகோ,

புகை – ஃபோக்,

பாம்பு – பாபு,

அடி – அசி,

பிடி –பிசி

ஆகியவற்றைக் கூறலாம் . பல்வேறு நாடுகளுடன் வணிகத் தொடர்பு கொண்டதால் தமிழ்மொழி கடல்கடந்து பரந்து விரிந்து பரவியது. பழந்தமிழகத்துக்கும் பாபிலோனியாவுக்கும்வணிகத் தொடர்பு இருந்தநிலையில், நம் நாட்டினின்றும் ஏற்றுமதி செய்யப்பெற்ற பொருள்களை நாம் பயன்படுத்திய சொற்களைக் கொண்டே அவர்களும் அழைத்தனர். தோகை என்ற தமிழ்ச்சொல் ஹீப்ரு மொழியில் துகி எனப்பட்டது. தேக்கு, ஊர் என்ற சொற்களும் அவ்விதமே ஆளப்பட்டன.

தமிழர்களால் தமிழ் வளர்ந்து வருகின்றது. உலகெங்கும் புலம்பெயர்ந்து வாழும் தமிழர்கள், தமிழகத்தில் வாழும் தமிழர்கள் என அனைத்துநிலை மக்களும் மொழிப்பற்றுடன் வாழ்தல் வேண்டும். "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற புரிதல் இதற்கு இன்றியமையாதது. சங்க இலக்கியங்களில் ஒன்றான பட்டினப்பாலையில் இடம்பெற்றுள்ள "மொழிபெயர் தேயத்துப் புலம்பெயர் மக்கள் கலந்தினிது உரையின் முட்டாச் சிறப்பின் பட்டினம்" என்ற வரிகள் இந்நாளில் நாம் நம் மொழியை நேசிக்கவும், பிறமொழி பேசும் மக்களை மதிக்கவும் கற்றுக்கொடுக்கின்றன.

மொழி பண்பாட்டின் கருவூலம். ஒரே பொருளைக் குறிக்கும் பல்வேறு சொற்களைக் கொண்ட சொல்வளம் பிறமொழிகளைக்காட்டிலும் தமிழுக்கே அதிகம் உண்டு. தமிழ், எழுத்துகளோடு மட்டும் தொடர்புடைய மொழியன்று. அது பண்பாட்டோடு, உயிரோடு, உணர்வோடு தொடர்புடையது. எனவேதான் உலகத் தமிழ் சிங்கப்பூர், மலேசியா, கனடா, இலங்கை, துபாய், மொரிசியசு, இந்தோனேசியா, பிஜி தீவு, தென்னாப்பிரிக்கா, அமெரிக்கா, இங்கிலாந்து எனப் பல நாடுகளில் தொப்புள்கொடி உறவாக உள்ளது. விழிப்பாய் இருப்பவர்களுக்கு எதுவும் வியப்பாய் இருக்காது என்பர். பதினோரு மொழிகள் கற்ற மகாகவி பாரதியாருக்குத் தாய்மொழியாம் தமிழ்மொழி இனித்தது. உலக நாடுகளின் கல்வி அறிவியல் பண்பாட்டு நிறுவனமான யுனெஸ்கோ கிரேக்கம், எபிரேயம், இலத்தீன், சீனம், அரபு ஆகிய மொழிகளோடு தமிழையும் செவ்வியல் மொழியாக அறிவித்தது.

தேமதுரத் தமிழோசை உலகமெலாம் ஒலித்திடும் இந்நாளிலும் தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய நூல்களைக் கற்க முடிகிறது என்றால் எத்துணை அழகான, காலத்தால் முற்பட்ட மொழி தமிழ்மொழி. அதனை உணர்ந்து,

"எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்!

இல்லத்திலும் தமிழ்! உள்ளத்திலும் தமிழ்!"

என்ற நிலைப்பாட்டைக் கொண்டு முன்னேற்றத்தின் முகவரியாய் விளங்கும் நம் தாய்மொழியைக் காக்கவேண்டியது அனைவரின் தலையாய கடமையாகும். நிற்க.

அறிவுலகம் போற்றும் அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "ஒலிகள் பிரசவிக்கும் கிளவிகள்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், கனடா நாட்டைச் சார்ந்த, பேரா முனைவர் உதயன் துரைராஜா அவர்களின் Tamil New Year Could be more Scientific என்ற ஆங்கிலக் கட்டுரையும், சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களின் "தமிழ் நிகண்டுகளில் தமிழ்க் கடவுள்" என்னும் கட்டுரையும், சென்னை, சோகா இகெதா கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் அரு. அபிராமி அவர்களின், "நகரத்தாரின் உறவுமுறைப் பெயர்கள் (வட்டார வழக்குச் சொற்களின் பங்களிப்பு)" என்னும் கட்டுரையும் இம்மாத "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்புலமையோருக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டு கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், அறிஞர்கள் ஒருங்கிணைப்பைச் செய்துவரும் பேரா.முனைவர் சச்சிதானந்தம் அவர்களுக்கும் பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

# ஒலிகள் பிரசவிக்கும் கிளவிகள்



அகராதியியலாளர், முனைவர் ச.சச்சிதானந்தம்.
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம். பாரிசு




மிருகங்கள் எழுப்பும் ஒலிகளைப் போலச் செய்தலே மொழிகள் உருவாகுவதற்கு அடிப்படை எனக் கருதப்பட்டது. ஒலி நிலை ஆக்கம் காரணமாக அமையப் பெறும் சொற்கள் ஒலிக்குறியீட்டுச் சொற்கள்அல்லது ஒலிக் குறிப்புச் சொற்கள் எனப்படுகின்றன. இவை மனிதன், மிருகங்கள், பறவைகள், வாகனங்கள், வாத்தியங்கள் மற்றும் இயற்கையினால் உண்டாக்கப்படும் ஒலிகளாக அல்லது ஓசைகளாக அமைகின்றன. ஒரு சொல்லுக்கு அது உணர்த்தும் பொருள் அமைவதற்கு அச்சொல்லின் ஒலிகள் அடிப்படையாக அமையும் நிலையே ஒலி நிலை ஆக்கம் எனப்படும்.

| | தமிழ் | ஆங்கிலம் | பிரெஞ்சு |
|---|---|---|---|
| ஆச்சரியம், வியப்பு | ஆ! | Oh! | ah! |
| குறட்டை ஒலி | உர்–உர்–உர்! | rrrr - rrrr! | rrr-rrr! |
| அவலம் | ஐயோ! | alas! | hélas! |
| காகம் | காகா! | caw! | croa! |
| சேவல் | கொக்கரக்கோ! | cook-a-doodle-doo! | cocorico |
| நாய் | ளொள், ளொள்!<br>வொவ்,வொவ்! | bow-wow! | ouah-ouah |
| வாகனம் | ர்றும் – ர்றும்! | vroom-vroom! | Vroum-vroum! |
| குண்டுவெடிப்பு | பூம்! | boom! | boum! |
| கடிகாரம் | டிக்–டிக்! | tick - ti c k ! | tic-tac! |

மனிதன் – மிருகங்கள் இயற்கை எழுப்பும் ஓசைகளைப் போல, சொல்லி அல்லது எழுப்பிக் கருத்துகளைப் பரிமாறிக்கொண்ட அடிப்படையில்தான் பேச்சு மொழி தொடங்கியிருக்கக்கூடும் என்று Otto Jespersen எனும் மொழியியலாளரால் முன்வைக்கப்பட்டது. ஒலிக்குறியீட்டுச் சொற்கள் உருவான விதங்களுக்கு "bow – wow" theory, "ding – dong" theory, "pooh–pooh" theory "yo–he–ho" theory என்கின்ற பெயர்கள் வைக்கப்பட்டுள்ளன.

1) மிருகங்கள் எழுப்பும் ஒலிகளின் அடிப்படையில் சொற்கள் உண்டாகின்றன. இவ்வகைச் சொல்லாக்கம் "bow – wow" theory எனவும்,

2) இயற்கையின் இடி, மணியின் ஓசை, தண்ணீர் தெறிக்கும் சத்தம் முதலானவற்றின் அடிப்படையில் சொற்கள் படைக்கப்படுகின்றன. இவ்வகைச் சொல்லாக்கம் "ding – dong" theroy எனவும்

3) மனிதன் எழுப்பும் உணர்வொலிகளின் அடிப்படையில் உருவாக்கப்படும் சொல்லாக்கம் "poh–pooh" theory எனவும்

4) மனிதர்கள் கூட்டாக இயங்கும்போது, வேலைசெய்யும்போது எழுப்பப்படும் சத்தங்களின் பெயரிலும் சொற்கள் உண்டாக்கப்படுகின்றன. இவ்வகைச் சொல்லாக்கம் "yo–he–ho" theory எனவும் அழைக்கப்படுகின்றன.

மேற்கூறப்பட்ட கொள்கைகளின்வழிச் சொற்கள் உருவாக்கிய முறை ஒலிக்குறியீட்டுச் சொல்லாக்கத்திற்கு Onomatopoeia – l' onomatopée அத்திவாரம்.

Onomo என்றால் பெயர் எனவும், Poein என்றால் உருவாக்குதல் எனவும் கிரேக்கத்தில் பொருள். இச்சொல்லின் மூலமே ஆங்கிலத்தில் Onomatopoeia என்ற சொல்லும் பிறந்தது.

Onomo + poiein → Onomatopoeia / Onomatopée

Onomo – பெயர்

poiein – உருவாக்கம்

ஒலிக் குறியீட்டுச் சொற்கள் மொழிக்கு மொழி வேறுபட்டனவாக இருக்கின்றன. உதாரண மாக நாய் குரைப்பதை "வவ்–வவ்" அல்லது "ளொள் ளொள்" என்று தமிழிலும் "bowwow" என்று ஆங்கிலத்திலும் "ouah–ouah" என்று பிரெஞ்சிலும் "wu – wu" என்று சீன மொழியிலும் "wan – wan" என்று ஜப்பானிய மொழியிலும் "tyaff – tyaff" என்று ரஷ்ய மொழியிலும் சொல்லப்படுகிறது.

| தமிழ் | ஆங்கிலம் | பிரெஞ்சு | சீனம் | யப்பானியம் | ரஷ்யன் |
|---|---|---|---|---|---|
| வவ்–வவ் | bow-wow | ouah-ouah | wu-wu | wan-wan | tayff-tayff |

| தமிழ் | ஆங்கிலம் | பிரெஞ்சு | ஜேர்மனியம் | ரஷ்யன் | இத்தாலியம் |
|---|---|---|---|---|---|
| குவாக்–குவாக் | quack | couin–couin | rap–rap | kriak–kriak | qua – qua |

அ) தமிழ் உணர்வொலி : மகிழ்ச்சி ஆ!, ஊ,! ஏ,! ஐ!, ஆய்!, ஓ!, ஆஹா!,
நோவு – ஆ!, ஈ!, ஊ!, ஐயோ!

| | | |
|---|---|---|
| ஆ) ஒப்பொலி | : | சப் – சப்பு, ஏவ்–ஏவறை(ஏப்பம்), உர் – உர் –குறட்டை<br>கா – காகம், குர் – குர் – குரங்கு, கூ, கூ– குயில்<br>மியாவ்–பூனை |
| இ) குறியொலி | : | உஷ்!, ச்சு!, ஊம்! |
| ஈ) வாய்ச்செய்கை ஒலி | : | ஆ! (வாய்திறத்தல்) அவ்! (கவ்வுதல்) |
| உ) மழலை ஒலி–<br>குழவி மொழி | : | இங்கா!, பா! (பால்), சோ! (சோறு), மீ! (மீன்) |
| ஊ) ஒற்றைக்கிளவி | : | கிண்!, பளார்!, மடார்!, கடக்கு! |
| எ) இரட்டைக்கிளவி | : | கல கல, கணீர் கணீர், முணு முணு |
| ஏ) அடுக்குக் கிளவி | : | கிண் கிண், டும் டும். சல் சல் |
| ஐ) எதுகைக் கிளவி | : | அம்மா, கொம்மா, கிய்யா, மிய்யா, தொப்புதிப்பு |
| ஒ) மோனைக் கிளவி | : | கிண்கிணீர், மடமடார் |
| ஓ) தாயொலி | : | தாயொலி!, ஆராரோ!, கக்கா! காகம் காகா என்று கரையும், கிளி கீகீ என்று கத்தும், குயில் கூகூ என்று கூவும், பூனை மியாவ் மியாவ் என்று கத்தும், நாய் வள்வள் என்று குரைக்கும் |

**தமிழ்வளம்** **ஒலிகளும் அவற்றின் வகைகளும்**

| பெயர் | ஒலி |
|---|---|
| அரவம் | பொதுவான ஒலி |
| ஆர்ப்பு | பெரிய ஊர்வலத்தில் கேட்கும் பல் இயவொலி |
| இசை | இனியஒலி |
| இரைச்சல் | மழை, அருவி, சந்தைக் கூட்டம் முதலியவற்றின் பேரொலி |
| ஒலி | எழுத்தொலி |
| ஓசை | சொற்றொடர் அல்லது பாட்டொலி |
| குரல் | தொண்டையொலி |
| கூச்சல் | பலர் கூடிக் கத்துமொலி |
| சந்தடி | விழா நிகழுமிடத்திலும் மாநகர வீதியிலும் பல்வேறு கவனமுள்ள மக்கள் தொழிலால் உண்டாகும் ஒலி . |
| சந்தம் | அசையொத்த அடிகளைக் கொண்ட பாட்டொலி |
| சிலம்பு | எதிரொலி |
| சிலை | பாடும்போது கலகலவென்றிலங்கும் ஒலி |
| பூசல் | சண்டையிலும் போரிலும் கேட்கும் ஒலி |
| முழக்கம் | இடியாலும் பறையாலும் உண்டாகும் பேரொலி |
| வண்ணம் | எழுத்தொத்த அடிகளைக் கொண்ட பாட்டொலி |

## 1) Interjections or Exclamations

| | | | |
|---|---|---|---|
| ah! | Surprise, joy, etc | ஆச்சரியம், சந்தோசம்... | ஆ! |
| aha! | Surprise, triumph, etc | ஆச்சரியம், வெற்றி... | ஆஹா! |
| ahchoo | Sneezing | தும்முதல் | அச்சும்! |
| ha-ha | laughter | சிரித்தல் | ஹா–ஹா! |
| oh! | Surprise, sympathy etc | ஆச்சரியம், இரக்கம் | ஓ! |
| ouch! | sudden pain | திடீர் நோவு, வலி | ஊய்! |
| psst! | unobtrusiv sound to call sb's attention | ஒருவரை மெதுவாக அழைத்தல் | ப்ஸ்ற் |
| sh! shhh! | Shushing | உஷ் சொல்லுதல் | ஷ்! |

உணர்வொலி அல்லது வியப்பிடைச்சொல்

## 2) Speech Sound

பேச்சொலி

| | | |
|---|---|---|
| babble | - speak meaninglessly | அர்த்தமற்றுப் பேசுதல் |
| blah blah-blah | - continuous meaningless chatter | தொடர்ந்து அர்த்தமில்லாமல் அலட்டுதல் |
| hallo! hello! | - call or answer someone | ஒருவரை அழைத்தல் |
| hey! | - call attention | கவனத்தைத் திருப்பச் சொல்லுதல் |
| hi! | - greeting | வணக்கம் தெரிவித்தல் |
| murmur | - low, indistinct speech | முணுமுணுத்தல் |
| natter! | - talk on and on - | தொடர்ந்தேச்சியாக கதைத்தல் |
| shush | - urge to be auiet | உஷ்! சொல்லுதல் |

| Animal sounds | | மிருகங்களின் ஒலி | |
|---|---|---|---|
| baa - | sheep | moo - | cow |
| buzz - | bee | neigh - | horse |
| chirr - | grasshopper | oink - | ping |
| gobble - | turkey | peep - | small bird |
| he-haw - | donkey | quack - | duck |
| hiss - | snake | tweet - | small bird |
| hoot - | owl | whinny- | horse |

## 4)Sound words

ஒலிச்சொற்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| bawl | crackle | drone | hiss | patter | squel |
| bump | crinkle | fizz | gragle | rattle | titter |
| chuff | croon | flutter | jangle | sizzle | ululate |
| chack | yahoo | yoo-hoo | zap | zing | |

## 5)Sound Effects

## தொனிகள்

| | | | | |
|---|---|---|---|---|
| bang | clamg | glug | swish | whoom |
| beef | click | grr | tweep | yoop |
| boo-hoo | clink | off | va-va-voom | youch |
| boom | ding-dong | ploosh | vroom | zoom |

## Sound Effects தொனிகள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Ape | gibbers | Dog | barks | Hen | crackles |
| Ass/donkey | brays | Frog | croaks | Owl | hoots |
| Beetle | drones | Horse | neighs | Pigeon | coos |
| Elephant | trumpets | Lamb | bleats | Bull | bellows |
| Lark | sings | Lion | roars | Camel | grunts |
| Parrot | screeches | Monkey | chatters | Fox | yells |
| Robin | chirps | Mouse | squeals | Cat | mews |
| Wren | warbles | Serpent | hisses | Pig | grunts |
| Bee | hums | Wolf | howls | sheep | bleats |
| | | Cock | crows | Tiger | growls |
| | | Duck | quacks | Bear | gruntles |
| | | Eagle | screams | Cuckoo | coos |
| | | | | Duck | quacks |

Le français – பிரெஞ்சு

i) L'interjection உணர்வொலி அல்லது வியப்பிடைச்சொல்

ah! ஆ!

eh! ஏ!

aie! ஆய்! (ஊ)

chut! உஷ்!

pst! ப்ஸ்ற்! உஸ்!

beurk! சீ!

ii) L'imitation d'un bruit,d'un cri d'animal சத்தம், ஒலி (மிருகம்)

boum! பூம் !

clac! (க்ளாக்) பளார்!

toc! toc! டொக்! டொக் !

miaou! மியாவ்!

meuh! மே!

pan! டுமீல்!

iii) La creation enfantine குழந்தைகள் வார்த்தை

papa! பப்பா! (அப்பா)

do do! தெ((த) டா தெ(த) டா! (தூக்கம் நித்திரை)

tonton! தொ (ன்) தொ(ன்) ! (மாமா (uncle]),

iv) Les bruits du corps humain மனித உடல் ஒலி

| | | | |
|---|---|---|---|
| slurp | - | Aspiration d'un aliment | உணவு விழுங்குதல் |
| hio!, hips! | - | Hoquet | விக்கல் |
| atchoum! | - | Etenuement | தும்முதல் |
| waouh! | - | Joie | பெரும் சந்தோசம் |
| ha! ha hi! hi/hé, hé/ho | - | Rire | சிரித்தல் |
| prout! | - | Pet | குசு விடுதல் |

**v) Sentiments உணர்ச்சிகள்**

| | | | |
|---|---|---|---|
| clap, clap | - | Applaudissements | கைதட்டுதல் |
| berk, beurk! | - | Dégout | அருவருப்பு |
| aïe!, ouille! | - | Douleur | வலி, நோவு |
| mm...! | - | Satisfaction | திருப்தி |
| ouf! | - | Soupir de fatigue, soulagement | ஆறுதல் |

**vi) Les bruits de la nature இயற்கையின் ஒலிகள்**

| | |
|---|---|
| Crac! | மரக்கிளை முறிதல் |
| Plic ploc! | குழாய்த் தண்ணீர் சொட்டுதல் |
| Plouf! | தண்ணீருக்குள் பொருள் விழுதல் |
| badaboum! | நிலத்தில் ஏதாவது விழுதல் |
| hou hou! | காற்று வீசுதல் |

**vii)Les objets manufactures செய்யப்பட்ட பொருள்களின் ஒலிகள்**

| | | | |
|---|---|---|---|
| paf! pam! pan! | - | coup de feu | துப்பாக்கியால் சுடுதல் |
| Boum! | - | bombe | குண்டு வெடித்தல் |
| baoum! | - | canon | பீரங்கிவேட்டு |
| clac, tchac! | - | couteau | கத்தி |
| tic tac | - | montre, horloge | கடிகார ஒலி |
| ding dong! | - | cloche | மணியோசை |
| drinn! | - | sonnette | மணிச்சத்தம் |

**Les cris des animaux – français பிரெஞ்சு மிருகங்களின் ஒலிகள்**

| L'animal மிருகம் | Lw cri ஒலி | Le verbe வினை |
|---|---|---|
| L'ane – கழுதை | hi han! | braire |
| Le canard – வாத்து | coin coin! | cancaner |
| Le cheval – குதிரை | hi hi hi! | hennir |
| La chevre – வெள்ளாடு | mèèh! | bêler |
| Le mouton – செம்மறி | bèèh! | .... |
| Le Chat – பூனை | miaou! | miauler |
| Le Chien – நாய் | ouah! ouah! | aboyer |
| Le Coq – சேவல் | cocorico! | chanter |
| Le Corbeau – காகம் | croa! | croasser |
| Le crapaud – தேரை | coa! | coasser |
| Le hibou – ஆந்தை | hou hou! | hululer |
| L'oisea, – பறவை, குருவி | cui cui cui! | pialler |
| La poule – பேடு | cot cot cot! | caqueter |
| Le poussin – கோழிக்குஞ்சு | piou piou! | pèpier |
| La vache – பசு | meuh! | mugler |
| Le boeuf – எருது | | beugler |

# Tamil New Year Could be More Scientific

## Reinventing the Tamil Calendar is Necessary for the Benefit of Future Generations



Dr. Uthayan Thurairajah,

Tamils' two major celebrations are Thai Pongal and Tamil New Year. These festivals are on the wrong dates based on astronomical science and natural seasons. It is because of the Tamil astrological calendar, which is based on the sidereal (sayana) method. Ancient Tamil's astrological contribution is outstanding. However, there is a correction necessary to avoid the seasons being out of phase with the natural phenomenon of the earth. This research article analyses the astronomical and astrological reasons behind it, how and why we do that, and what to do about it.

INTRODUCTION

Tamil astrological calendar, the Mesha Sankranti marks the spring equinox (equi=equal, nox=night). Equinox occurs twice a year like the solstice. According to the Tamil astrological calendar, Tamil new year falls in the spring equinox (Mesha Sankranti) falls around April 14th at present as per the Gregorian calendar. However, there is an error in all these celebrations. If you follow the Hindu calendar, you notice that the dates of these festivals do not fall either on the correct dates of the seasons, or these fall on the accurate dates of the equinoxes and solstices.

BACKGROUND

The invention of the first intelligent and accurate tropical calendar goes to the Egyptians, who invented the calendar some 6000 years ago. Today the scientific calendar that we use, the Gregorian calendar, is a modification of this ancient Egyptian calendar. The Egyptians could invent the tropical calendar for a straightforward reason. "By timing the Sirius's appearance exactly from year to year, Egyptian astronomers eventually realized that the solar year was one-fourth day longer than 365 days.

Egyptians also used pyramids to measure shadows to determine the coming of the equinoxes." (Calendar – D.E. Duncan pp 21). We note that this Egyptian calendar of 365 days and 6 hours is accurate up to 11 minutes to the present most scientific Gregorian calendar that we use today. We should say that it was an incredible accomplishment for the Neolithic civilization of Egypt 6000 years ago. (According to the modern scientific measurement, the Solar year is 365.24222 days (based on the Vernal equinox as reference). It is about 365 days, 5 hours, and 49 minutes. It also may be noted that the modern calendar, as we have it today, was only modified in 1574 CE by Pope Gregory. It may also be noted that this modification was suggested by Roger Bacon of England as back in 1267 CE. The reason for this required modification was the tropical year is also affected by another factor called the precession of the equinoxes.

Gregorian Calendar

The Gregorian Calendar is widely used in the world today. The calendar used in the international standard for the term of dates and times: ISO 8601:2004. A solar calendar is based on a typical 365-day year divided into 12 months of irregular lengths. The solar year is measured by counting the period of the successful return of the earth to the same reference point on the ecliptic. However, we can measure it in two ways namely tropical year and sidereal year.

Tropical Year

A tropical (nirayana) year (Gregorian calendar) is also known as an astronomical year, a solar year, or an equinoctial year. It is, on average, approximately 365 days, 5 hours, 48 minutes, and 45 seconds long (365.24219 days). The tropical year reference point may be the 'equinox point. You measure the time from one spring equinox to the following spring equinox.




Sidereal Year

A sidereal (sayana) year (astrological calendar) is, on average, approximately 365 days, 6 hours, 9 minutes, and 9.5 seconds long (365.25636 days). We may take one reference point by taking a fixed background star on the ecliptic. In this system, the solar year measured is the actual time taken for the earth to revolve once around the Sun concerning a fixed star. Sidereal (astrological) year is little longer than a tropical year, approximately 20 minutes and 24 seconds because of precession.

Tropical Year & Seasons

The primary point to be made here is not how accurate was the tropical calendar that the Egyptians invented initially but the fact that it was this tropical calendar of the Egyptians that was adopted and developed further by the scientific communities of the Western world, starting with the Greeks (Ptolemy), Romans (Julus Ceaser) and by the Christian world (Pope Gregory), and that it is this tropical calendar that the scientific communities of the world

Precession of equinox

It is this 'precision of the equinoxes' is not accounted for in the sidereal calendar and makes out of phase with the seasons. The discovery of the 'Precession of equinox' is usually attributed to Hipparchus (190–120 BC), a Greek astronomer. According to Ptolemy, another Greek astronomer of the 2nd century,




Hipparchus measured the longitude of Spica (Sitra) and other bright stars on the equinox day and compared his measurements with data from his predecessors and concluded that Spica had moved about 2° relative to the equinox. He also compared the lengths of the tropical year (the time it takes the Sun to return to an equinox) and the sidereal year (the time it takes the Sun to return to a fixed star) and found a slight discrepancy. Hipparchus concluded that the equinoxes were moving ("precession") through the zodiac and that the precession rate was less than 1° in a century.

Hindu Astronomers

The Vedic Tamils did not know about this 'precision' since it was invented only in about 190 BC or after. However, this knowledge was known later since this invention was after Alexander the Great (326 BC), who opened the communication between India and Greece. Hindus use the word Sankranti for the 'precision of the equinoxes,' which indicates that they knew about it. However, we do not find any records that Indians ever tried to utilize this knowledge to correct the calendar to synchronize with the seasons. The astrological calendar was later reformed several times in the Christian era by several Hindu astronomers such as Aryabhatta, Barahmihira, Bhaskara, and others. However, in none of these revisions, the effect of the 'precession of the equinox' was addressed or was considered to modify the calendar.

Discrepancy

Let us now see how the discrepancy of 24 days has crept into the present Tamil calendar. According to Surya Siddhanta, an ancient astronomical treaty, the Indian sidereal (sayana) year coincided with the tropical (nirayana) year in KY (Kali Yugo) 3600, which has now been standardized as the 285 CE. In 285 CE, the solstices and the equinoxes were per the present Gregorian calendar: the Mesha Sankranti on 21st March. Since then, however, the equinoxes are processed in the Hindu calendar at the rate of 20 minutes a year for a total (2022-285) =1737 years, which accounts for the (1737*20)/60/24 = 24 days discrepancy that we have today. To bring the matter home, you may note that at the present rate, you can find that 1000 years ago, the Tamil were celebrating Tamil New year (Mesha Sankranti) on March 31, 1022. In another 1000 years, Tamil will celebrate Tamil New year on April 28, 3022.

Reformation Attempts

It is not that Tamils did not try to reform the calendar in modern times. The Indian Calendar Reform Committee tried to improve the astrological calendar. A unified calendar was introduced in 1957, creating a National tropical calendar that all tried to incorporate the Hindu religious calendars. This effort, however, failed mainly due to the orthodox schools of Vedic astrology, which rejected modern astronomy. As a result, Tamils still follow the traditional old Vedic treaties. And hence the discrepancy of the 'precision of the equinoxes' with the seasons remains.

In the Tamil astrological calendar system, the tropical seasons (and the solstices and the equinoxes) are out of phase by 24 days at present with the correct seasonal phenomenon as marked by the Gregorian calendar. To make matters worse, it is not only out of phase, but this out of phase is also increasing every year. Therefore, it is




Metrological – அளவியல், Astronomical - வானியல்

essential to fix this error as soon as possible.

ASSESSMENT

We can analyze how and why the Tamil calendar (sidereal) is out of phase with the seasons and what to do about it. First, it is out of phase is straightforward. Tamil measures a 'sidereal' solar year, while the scientific community measures a 'tropical' solar year. The sidereal method is to calculate the placement of zodiac signs and constellations. The primary purpose of a calendar is to measure the length of the year along with its seasons. The tropical year accurately measures the seasons while the sidereal year does not.

The sidereal year calendar initially developed by the Tamils thousands of years ago. It is not necessary to speculate here as to why the Tamil could not develop a more practical tropical




year calendar by measuring from one 'Uttarayana' to the next or by taking the help of vital local annual phenomena like the 'monsoons.' It may be because of their religious world view, or it may be because developing a tropical calendar needed practical scientific planning and execution of earth-bound experiments of measuring shadows to determine solstices and equinoxes or observing the monsoons for that matter, and these were considered boring and not significant by the Vedic Tamils.

What is vital for us to know is that usually, one would expect that both the measurements, tropical and sidereal, would give the same length of the year. However, that is not the case. When the Sun has returned to the same apparent position relative to the background stars, one complete orbit, the equinox is past twenty minutes. In other words, every year, the equinox occurs twenty minutes earlier in orbit than the sidereal year. Today we know that this difference in time measurements is due to the 'Precession of equinox' occurs due to the wobbling motion, like that of a top, of the earth.

This precession is about 50.3 seconds of arc per year or 1 degree every 71.6 years. Thus, a complete precession cycle covers approximately 25,765 years, the so-called Platonic year. During this time, the equinoxes and the seasons will regress a full 360° through all twelve constellations of the zodiac. Note that 20 minutes per year is approximately 365 days in 25,765 years. Thus, the equinoxes, and the seasons, will always be out of phase in a sidereal astrological calendar. The European Gregorian calendar, which measures the tropical year, considers the effect of the 'precession of the equinox.' It, therefore, is synchronized with the seasons.

Discussion

The time has come to decide whether to follow the astrological way of celebrating the Tamil New Year or based on seasonal dates. Tamil scholars need to have a serious discussion about this to find a solution. It is unnoticeable that there is a slight difference of about twenty minutes between these two measurements each year. The accumulated out of phase is continuously increasing every year. Therefore, the gradual changes make the equinoxes, and the seasons will backslide through all twelve constellations of the zodiac. It is essential to fix this error as soon as possible.

The calendars are human-made based on human considerations, calculations, trials, and errors—each calendar system best suited for their needs, primarily religious, agricultural, and sometimes social. The story of the calendar is the story of man's attempt to develop some order in history and timekeeping. If the earth's wobble (precession) does not happen, the equinox and solstice will not move and match the sidereal calendar. Since there is precession, the seasonal changes are the reality. Therefore, we need to follow the tropical calendar.

Summary

Astrological perspective, the sidereal system seems to be fine but not for the secular and seasonal festivals like Pongal and New Year. There are multiple solutions available. Both festivals are based on seasons. Therefore, it needs to be correlated with nature and scientifically analyzed and resolved. It is important




that the public must be aware of the situation. It should be noted that Thai Pongal is celebrated on December 21. 285 and Tamil New Year is celebrated on March 21, 285.

Thai Pongal and Tamil new year celebrations are based on astrological calculations. The translation of Tamil months to English will lose its meaning. For example, Thai and siththirai can coincide with any of the 12 English months due to the sidereal calculation method. The sidereal method and tropical method have own merit. The sidereal method is time mathematics, and the tropical method is climate mathematics. Both approaches have their values.

This article mainly focuses on Tamil celebrations, and it also impacts the other communities who follow the same reasons to celebrate the new year and Thai Pongal. So far, it has been working fine, but it will create significant confusion and blame the previous generation for misleading society and lose its merit in the future. Therefore, it needs to be fixed as soon as possible. Thai Pongal and Tamil New year celebrations are more associated with climate than astrological calculations. Therefore, the sidereal method does not work for Thai Pongal and Tamil new year.

# தமிழ் நிகண்டுகளில் தமிழ்க் கடவுள்




முனைவர் **இரா. பன்னிருகைவடிவேலன்**

இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, வேல்ஸ் அறிவியல் தொழில் நுட்ப ஆராய்ச்சி நிறுவனம், சென்னை 600 117


தொல்காப்பியர் குறித்த ஐந்து வகை நிலங்களுள் குறிஞ்சி நிலக்கடவுள் முருகன். முருகனின் ஆயுதமான வேல், சேவல் போன்றவை ஆதிச்சநல்லூர் அகழாய்வின் பொழுது சுமேரியப் பகுதியில் கிடைத்தன. கிறித்துப் பிறப்பதற்கு முன்பிருந்தே பல நூற்றாண்டுகளாக முருகவழிபாடு தமிழ் மக்களிடம் இருந்துள்ளது. அடியார்களுக்கு அருமருந்தாக உள்ள திருமுருகாற்றுப்படையில் விநாயகர் அகவல் இல்லை. எனவே 7ஆம் நூற்றாண்டுகளுக்கு முன்பே முருகன் வழிபாடும்திருமுருகாற்றுப்படையும்வந்திருக்கவேண்டும்.

முருகன் என்ற படிமம் அழகு, முருகு – இளமையுடன் கூடிய அழகு. இவை தவிர முருகு என்பதற்கு வெறியாடுதல் [முருகயர்ந்து வந்த முதுவாய் வேலன் (குறுந். 362)], வேள்விசெய்தல் [படையோர்க்கு முருகயா (மதுரைக். 38)], முருகன் [அருங்கடி வேலன் முருகொடு வளைஇ (மதுரைக். 611)], தெய்வம் [முருகு மெய்ப் பட்ட புலைத்திபோல (புறநா. 259)] எனப் பல்வேறு பொருள்கள் உள்ளன. இவை முருகனின் பல்வேறு இலக்கிய நிலைகளாம். முருகியம் என்பது குறிஞ்சிநிலத்தின் முருகனுக்குரிய வெறியாட்டுப் பறையைக் குறிக்கும் (தொல். பொ. 18, உரை).

சுந்தரரின் தேவாரம், வேம்பத்தூராரின் திருவிளையாடற்புராணம் தனிப்பாடல்கள் போன்றவற்றில் முருகனைக் குறிக்க செட்டி (cetti) என்ற சொல் எடுத்தாளப்பட்டுள்ளது எனக் குறிக்கப்பட்டுள்ளார். செட்டி என்பதற்கு வைசியன் [முட்டில் வாழ்க்கைச் செட்டியார் பெருமகன் (பெருங். இலாவாண. 20, 126)] என்பதோடு, முருகன் [கடற்சூர் தடிந்திட்ட செட்டி (தேவா. 742, 10)] என்னும் பொருளையும் பேரகராதி தந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

முருகனது பெயர்களை நிகண்டுகளின்வழிக் காணலாம்:–

1) அங்கிவிழி வந்தவன் (ஆ. நி. 9),
2) அசுரர் தடிந்தோன் (பிங். 110),
3) அண்ணல் (தமிழ் உரிச். 13),
4) அமணழித்தான் (பொதி.நி. 8),
5) அமரர் (பொதி.நி. 8),
6) அமரர்சேனாபதி (அபி.மாலை. 12),
7) அம்பிகை மகன் (ஆ. நி. 9),
8) அயற்சிறை புரிந்து விடுத்தோன் (பொதி.நி.9),
9) அயன்குரு (நாமதீப. 30),
10) அயிலான் (உரி. நி. 13),
11) அயிலேந்தி (கயா. 11),
12) அரன் (நவமணி. 34),
13) அரன்சுதன் (அபி.தனி. 9),
14) அரன்மகன் (திவா. 7, பிங். 110, சூடா. 31, அபி. மாலை. 12)



15) அரிதிருமருகன் (பிங். 110)
16) அரிமருகன் (நவமணி. 34)
17) அருணகிரிக்கருள்வோன் (பொதி.நி. 9, நாமதீப. 31)
18) அரும்பகை தடிந்தோன் (தமிழ் உரிச். 13)
19) அவுணரைக் கடிந்தோன் (கடந்தோன்) (பொதி. நி. 9)
20) அவுணர் போர்கடிந்தான் (உரி. நி. 13)
21) அழகன் (பொதி.நி. 8, தமிழ் உரிச். 13)
22) அழலின் வந்தோன் (தமிழ் உரிச். 13)
23) அறுபடை வீட்டினன் (தமிழ் உரிச். 13)
24) அறுமீன் காதலன் (திவா.7, பிங். 110, பாரதிதீப. 14, ஆ. நி. 8, தமிழ் உரிச். 13, அபி.மாலை.12)
25) அறுமுகக்கடவுள் (பிங். 110)
26) அறுமுகன் (திவா. 7, ஆ. நி. 8, அபி.மாலை.12, அபி.தனி. 9, நவமணி. 34)
27) அறுவடி ஒரு வடிவானோன் (தமிழ் உரிச். 13)
28) அனையன் (தமிழ் உரிச். 13)
29) அன்றில் வெற்புஅட்டோன் (நாமதீப. 33)
30) ஆசான் (பிங். 110, சூடா. 31, ஆ. நி. 8)

31) ஆடூர்ந்தோன் (நாமதீப. 33)

32) ஆணைமுகவற்கு இளையவன் (ஆ. நி. 9)

33) ஆண்டலைக்கொடி உயர்த்தோன் (சூடா. 31)

34) ஆண்டலைக்கொடியோன் (அபி.மாலை. 12, தமிழ் உரிச். 13)

35) ஆறிருகரத்தோன் (பிங். 110)

36) ஆறிருகரன் (பொதி.நி. 8)

37) ஆறு இருபுயன் (ஆ. நி. 9)

38) ஆறு முகத்தான் (உரி. நி. 13)

39) ஆறு முன்னத்தோன் (தமிழ் உரிச். 13)

40) ஆறுதலத்திறைவன் (பொதி.நி. 9)

41) ஆறுதலன் (நாமதீப. 30)

42) ஆறுமுகன் (சூடா. 31, பாரதிதீப. 13)

43) இந்த்(தி)ராணிமருகோன் (நாமதீப. 30)

44) இருஞ்சிறை மீட்போன் (தமிழ் உரிச். 13)

45) இருட்பகைவென்றோன்(தமிழ்உரிச்.13)

46) இலக்கத்து ஒன்பதின்மர் முத்தோன்
(பொதி.நி. 8)

47) இளையோன் (தமிழ் உரிச். 13)

48) இறைநுதல் வழியிடைத் தோன்றிய விறலோன்
( தமிழ் உரிச். 13)

49) இறைமகன் (தமிழ் உரிச். 13)

50) இறையோன் (தமிழ் உரிச். 13)

51) இறைவற்கு ஓரெழுத்து உணர்த்திய மேலோன் (தமிழ் உரிச். 13)

52) ஈசன் குரு (நாமதீப. 30)

53) ஈசன் மகன் (பொதி.நி. 8)

54) ஈராறு செவியான் (நாமதீப. 32)

55) ஈராறுகையான் (நாமதீப. 32)

56) ஈராறுபுயத்தான் (நாமதீப. 32)

57) உக்கிரன் (ஆ. நி. 9)

58) உத்திராயுதத்தான் (பொதி.நி. 9)

59) உமை சிறுவன் (பொதி.நி. 9)

60) உமைமகன்(அபி.மாலை.12)

61) உமையவள் சேய் (நவமணி. 35)

62) உம்பர் (தமிழ் உரிச். 13)

63) உம்பர் சேனைமன் (நாமதீப. 33)

64) உருத்திராயுதன் (நாமதீப. 30)

65) எழிலிளையன் (பொதி.நி. 8)

66) ஓர் புலவன் மேல் பாடினோன் (நாமதீப. 31)

67) கங்கை மகன்(உரி. நி. 12, ஆ. நி. 9)

68) கங்கைமைந்தன் (பிங். 110, சூடா. 31)

69) கடம்பணிவோன் (நாமதீப. 32)

70) கடம்பன் (திவா. 7, பிங். 110, கயா. 11, பாரதிதீப. 13, சூடா. 31, ஆ. நி. 8, பொதி.நி. 8, அபி. மாலை.12, அபி.தனி. 9, நவமணி. 34, சிந்தா.நி. 248; 287)

71) கந்தவேள் (ஆ. நி. 8)

72) கந்தன் (திவா. 7, பிங். 110; 526, உரி. நி. 12, கயா. 11, பாரதிதீப. 13, சூடா. 31, பொதி.நி. 8, நாமதீப. 29, அபி.மாலை.12, அபி.தனி. 9)

73) கயமா முகற்கினையான் (நவ மணி. 34)

74) கலையறி புலவன் (பிங். 110)

75) கலையுணர்புலவன் (அபி.மாலை.12, சிந்தா. நி 288)

76) கவுரிமைந்தன் (நாமதீப. 29)

77) கற்கி விறலழிப்போன் (நாமதீப. 31)

78) கற்பகவெறிந்தோன் (பொதி.நி. 8)

79) காங்கேயன் (திவா. 7, பிங். 110, சூடா. 32, ஆ. நி. 8, பொதி.நி. 8, நாமதீப. 29, அபி.தனி. 9)

80) காந்தளணிவோன் (நாமதீப. 32)

81) காந்தளந்தாரோன் (பாரதிதீப. 14)

82) காந்தன் (அபி.மாலை.12)

83) காரி (ஆ. நி. 9)

84) கார்த்திகேயன் (திவா. 7, பிங். 110, உரி. நி. 12, கயா. 11, சூடா. 31, ஆ. நி. 8, நாமதீப. 29, அபி. தனி. 9, சிந்தா.நி. 88; 287; 341)

85) கார்த்திகை மகன் (பொதி.நி. 8)

86) கார்த்திகையன் (பாரதிதீப. 13)

87) கீரனை மீட்டோன் (நாமதீப. 31)

88) குகன் (திவா. 7, பிங். 110, உரி. நி. 12, கயா. 11, சூடா. 31, ஆ. நி. 8, நாமதீப. 29, அபி.மாலை.12, பொதி.நி. 8, அபி.தனி. 9)

89) குமரன் (திவா. 7, பிங். 110, உரி. நி. 12, கயா. 11, பாரதிதீப. 13, சூடா. 32, ஆ. நி. 8, நாமதீப. 29, பொதி.நி. 8, அபி.மாலை.12, அபி.தனி. 9, நவமணி. 34)

90) கும்பன் குரு (நாமதீப. 30)

91) குரவன் (பொதி.நி. 9)

92) குராவணிவோன் (நாமதீப. 32)

93) குரு (அபி.தனி. 9)

94) குருகின்பெயரியகுன்றுஎறிந்தோன்(பாரதிதீப. 13)

95) குரோதன் (ஆ. நி. 9)

96) குழகன் (பிங். 110, சூடா. 31, ஆ. நி. 8, பொதி. நி. 8, நாமதீப. 30, அபி.தனி. 9, தமிழ் உரிச். 13, நவமணி. 34)

97) குளகன் (சிந்தா.நி. 341)

98) குறத்தி மணாளன் (தமிழ் உரிச். 13)

99) குறிஞ்சிக் கடவுள் (தமிழ் உரிச். 13)

100) குறிஞ்சிக்கிழவன் (பிங். 110, ஆ. நி. 9, நவமணி. 34)

101) குறிஞ்சிநாதன் (பாரதிதீப. 14)

102) குறிஞ்சிநிலக்கடவுள் (பிங். 526, ஆ. நி. 75)

103) குறிஞ்சிமன் (திவா. 7, பொதி.நி. 8, நாமதீப. 29)

104) குறிஞ்சிவேந்தன் (சூடா. 32, அபி.மாலை.12 வேதகிரி. 13:11) [405]

105) குன்றெறிந்தோன் (பிங்.110, கயா. 11, நவமணி. 34, சிந்தா.நி. 382)

106) கௌரிமைந்தன் (பிங். 110)

107) கௌரிதனையன் (ஆ. நி. 9)

108) கொடிச்சேவலன் (பாரதிதீப. 13)

109) கேந்திர பாலன் (ஆ. நி. 9)

110) கோழிக்கொடியோன் (நாமதீப. 32)

111) கோழிகொடியினோன் (ஆ. நி. 9)

112) கோன்மகள்கணவன்(தமிழ் உரிச். 13)

113) சங்கரன் புதல்வன் (ஆ. நி. 8)

114) சங்கராசாரி (பொதி.நி. 9)

115) சடாக்கரத்தான் (பொதி.நி. 8)

116) சடாட்சரன் (சிந்தா.நி. 77)

117) சடையன் (ஆ. நி. 9)

118) சண்முகன் (பாரதிதீப. 14, பொதி.நி. 8, நாமதீப. 32, அபி.மாலை.12, நவமணி. 34)

119) சமணைவென்றவன் (நாமதீப. 31)

120) சரவண துற்பவன் (நவமணி. 34)

121) சரவணத்து உதித்தோன் (திவா. 7)

122) சரவணத்தோன் (பாரதிதீப. 14)

123) சரவணபகவன் (ஆ. நி. 8)

124) சரவணபவன் (பிங். 110, சூடா. 31, பொதி.நி. 8, நாமதீப. 32, அபி.மாலை.12, அபி.தனி. 9, சிந்தா.நி. 248)

125) சரவணன் (கயா. 11)

126) சாண்மாதுரன் (சிந்தா. நி. 108)

127) சாமி (பிங். 110, சூடா. 31)

128) சிகாவளவாகனன் (பாரதிதீப. 14)

129) சிங்கானனனைஅட்டோன் (நாமதீப. 33)

130) சிஞுறுகீரனைக்காத்தோன் (பொதி.நி. 9)

131) சிம்புளானோன் (ஆ. நி. 9)

132) சிலம்பன் (பிங். 110, சூடா. 32, ஆ. நி. 8, அபி. மாலை. 12, அபி.தனி. 9, தமிழ் உரிச். 13)

133) சிவன்மைந்தன் (நாமதீப. 29)

134) சுப்ரமண்யன் (சுப்பிரமணியர்) (நாமதீப. 29)

135) சுரம் தணித்தோன் (நாமதீப. 30)

136) சுரர்தம்பதிஅளித்தோன் (பாரதிதீப. 13)

137) சுரேசன் (அபி.மாலை.12, அக. நி. 1517)

138) சுவாமி (திவா. 7, பாரதிதீப. 13, ஆ. நி. 8, பொதி.நி. 8, நாமதீப. 30)

139) சூதகுலாரி (பாரதிதீப. 14)

140) சூரனைஅட்டோன் (நாமதீப. 33)

141) சூர் தடிந்தான் (உரி. நி. 13)

142) சூர்ப்பகை (திவா.7, கயா.11, பாரதிதீப.14, ஆ. நி. 8, பொதி.நி. 8, அபி.மாலை.12, அபி.தனி. 9)

143) சூர்ப்பகைவன் (சூடா. 32)

144) செக்கர்வான் நிறத்தன் (ஆ. நி. 9)

145) செங்கிடாயூர்தி (பொதி.நி. 9)

146) செட்டி (திவா. 7, பிங். 110, பாரதிதீப. 13, ஆ. நி. 8, சூடா. 31, பொதி.நி. 8, நாமதீப. 29, அபி.மாலை.12, நவமணி. 34)

147) செட்டிசாமி (அபி.தனி. 9)

148) செந்தமிழ்க் கடவுள் (தமிழ் உரிச். 13)

149) செய்யோன் (தமிழ் உரிச். 13)

150) செல்வேள் (சிந்தா.நி. 59)

151) செவ்வேள் (திவா. 7, பிங். 110, கயா. 11, பாரதிதீப. 14, சூடா. 32, ஆ. நி. 7; 8, அபி.மாலை.12, தமிழ் உரிச். 13, சிந்தா.நி. 320; 382, நாநார்த்த. 698)

152) செவ்வேற் கடவுள் (நாநார்த்த. 843)

153) சேந்தன் (திவா. 7, பிங். 110, கயா. 11, பாரதிதீப. 14, ஆ. நி. 8, சூடா. 32, பொதி.நி. 8, நாமதீப. 32, அபி.மாலை. 12, அபி.தனி. 9, தமிழ் உரிச். 13)

154) சேய் (திவா. 7, பிங். 110, கயா. 11, பாரதிதீப. 14, சூடா. 31, ஆ. நி. 9, பொதி.நி. 8, நாமதீப. 32, அபி.மாலை.12, அபி.தனி. 9, நவமணி. 34, பொதி. நி. II : 1962)

155) சேய்நல் (தமிழ் உரிச். 13)

156) சேவலங் கொடிக் கடவுள் (ஆ. நி. 9)

157) சேவலங்கொடியோன் (திவா. 7, பிங். 110, பொதி. நி. 8)

158) சேவல் பதாகை உயர்த்தவன் (நவமணி. 34)

159) சேவற்றுஜன் (அபி.தனி. 9)

160) தடிந்தோன் (தமிழ் உரிச். 13)

161) தந்தனுக்கிளையோன் (அபி.மாலை.12)

162) தந்திக்கு இளையான் (நாமதீப. 30)

163) தளவாய் (பொதி.நி. 8)

164) தாரகற்செற்றோன் (சூடா. 31)

165) தாரகனைக் காய்ந்தான்(உரி. நி. 13)

166) தாரகாரி (பிங்.110)

167) தாருகசங்காரி (பொதி.நி. 9)

168) தாருகற்காய்ந்தோன் (கயா. 11)

169) தாருகற்செற்றோன் (அபி.மாலை.12)

187) படவரைஎறிந்தோன் (அபி.மாலை.12)

188) பண்ணவன் (தமிழ் உரிச். 13)

189) பதினெண் கண்ணன் (நாமதீப. 32)

190) பதினெண் விழியோன் (தமிழ் உரிச். 13)

191) பத்திரை கேள்வன் (ஆ. நி. 9)

192) பவளவடிவன் (நாமதீப. 31)

193) பன்றிதிறலட்டோன் (நாமதீப. 31)

194) பன்னிரு தோளான் (உரி. நி. 13)

195) பன்னிரு விழியோன் (தமிழ் உரிச். 13)

196) பன்னிருகையன் (தமிழ் உரிச். 13)

197) பாகு (அபி.மாலை.12)

198) பாவகி (பிங். 110, அபி.மாலை.12)

199) புதல்வன் (நவமணி. 34)

200) புலவன் (சூடா. 32, ஆ. நி. 8, நாமதீப. 29, அபி. தனி. 9, தமிழ் உரிச். 13) 200.

201) புனன் மகள் செல்வன் (தமிழ் உரிச். 13)

202) பொருப்பின் மங்கை மகன் (உரி. நி. 12)

203) பொருப்பு எறிந்தான்(உரி. நி. 13)

204) பொருவில் சிறுவிதி (ஆ. நி. 9)

205) மகத்தைபொருது அழித்தவன் (ஆ. நி. 9)

206) மஞ்ஞைஊர்தி (சூடா. 32, அபி.மாலை.12, சிந்தா.நி. 77)

207) மயிலாளி (திவா. 7)

208) மயிலூர்தி (உரி. நி. 13, கயா. 11, ஆ. நி. 8, நாமதீப. 29, அபி.தனி. 9, தமிழ் உரிச். 13)

209) மயிலோன் (தமிழ் உரிச். 13)

210) மயில் வாகனன் (பிங். 110)

211) மயூரன்(பொதி.நி. 8)

212) மராஅ வலங்கலன் (தமிழ் உரிச். 13)

213) மருகன் (தமிழ் உரிச். 13)

214) மலரோன் தன்னை வன்சிறை இட்டோன் (தமிழ் உரிச். 13)

215) மலைமகள் மைந்தன் (தமிழ் உரிச். 13)

216) மலையன் (நாநார்த்த. 843)

217) மாணுலகுஅளித்தோன் (தமிழ் உரிச். 13)

218) மாமன் மருகன் (தமிழ் உரிச். 13)

219) மாமுதல் தடிந்தோன்(தமிழ் உரிச். 13)

220) மாமையூர்தி(தமிழ் உரிச். 13)

221) மாயன் மருகன் (ஆ. நி. 8)

222) மாயோன் மருகன் (உரி. நி. 12, சூடா. 31, தமிழ் உரிச். 13)

223) மாரவேள்மைத்துனன் (அபி.மாலை.12)

224) மால் மருகோன் (நாமதீப. 30)

225) மால்மருகன் (அபி.மாலை.12, அபி.தனி. 9)

226) மான்மருகன் (பொதி.நி. 8)

227) முகம் ஆறுடையான் (நவமணி. 35)

228) முக்கணன் (ஆ. நி. 9)

229) முதல்வன் சேய் (சிவன்மகன்)(உரி. நி. 12, பாரதிதீப. 13)

230) முருகன் (வேதகிரி. 13:11) [405]

231) முருகிறையோன் (தமிழ் உரிச். 13)

232) முருகு(அபி.மாலை.12)

233) முறநாளுடையான் (தமிழ் உரிச். 13)

234) மேரு அசைத்தோன் (பொதி.நி. 9)

235) மேலவர்க்குஇறைவன்(திவா. 7)

236) மொழி புலவன் (பொதி.நி. 8)

237) யானைமுகவற்கு இளையோன் (பிங். 110)

238) ரதசினேகன் (பொதி.நி. 9)

239) வரைபகவெறிந்தோன் (திவா. 7, சூடா. 31, ஆ. நி. 9, அபி.தனி. 9, தமிழ் உரிச். 13)

240) வள்ளி (அபி.மாலை.12)

241) வள்ளி கேள்வன் (பிங். 110, ஆ. நி. 8)

242) வள்ளி தெய்வானை கேள்வன் (பொதி.நி. 8)

243) வள்ளி துணைவன் (கயா. 11)

244) வள்ளி நாயகன் (பாரதிதீப. 13)

245) வள்ளி மணவாளன் (சூடா. 32)

246) வள்ளி மணாளன் (திவா. 7, அபி.தனி. 9)

247) வள்ளிமன் (நாமதீப. 29)

248) வன்னிப்பூக்குமரன் (பிங். 110)

249) வாகுலேயன் (அபி.மாலை.12)

250) வாசவன் மருகோன் (நாமதீப. 30)

251) வாரணகேதனன் (கயா. 11)

252) வாரணத்துவசன் (அபி.மாலை.12)

253) வானகர்காத்தோன் (அபி.மாலை.12)

254) வானவர் (தமிழ் உரிச். 13)

255) வானவர் மீளி (தமிழ் உரிச். 13)

256) வானோர் தலைவன் (உரி. நி. 12, ஆ. நி. 8)

257) விசாகன் (திவா. 7, பிங். 110, உரி. நி. 12, கயா. 11, பாரதிதீப. 14, சூடா. 32, ஆ. நி. 8, பொதி.நி. 8, நாமதீப. 32, அபி.மாலை.12, அபி.தனி. 9, சிந்தா.நி. 59; 108; 310; 3184)

258) விண்ணூர் நாட்டினோன் (நாமதீப. 33)

259) வில்லி (ஆ. நி. 9)

260) விறலோன் (தமிழ் உரிச். 13)

261) விறையோன் (தமிழ் உரிச். 13)

262) வீரபத்திரன் (ஆ. நி. 9)

263)வீரர் முன்னோன் (நாமதீப. 29)

264)வெட்சி காந்தள் வெங்குரா அணிந்தோன் (தமிழ் உரிச். 13)

265)வெட்சிமலரோன் (பாரதிதீப. 14)

266)வெட்சியணிவோன் (நாமதீப. 32)

267)வெறியாட்டாளன் (அக. நி. 3310)

268)வெறியாட்டான் (பொதி.நி. 9)

269)வெற்பன் (பொதி.நி. 8)

270) வேடன் (நாமதீப. 32)

271) வேதாவைச் சிறையிட்டோன் (நாமதீப. 33)

272)வேலவன் (நாமதீப. 29)

273)வேலன் (பிங். 110, பாரதிதீப. 13, பொதி.நி. 8, அபி.தனி. 9, தமிழ் உரிச். 13, அக. நி. 3310)

274)வேலிறை (சிந்தா.நி. 310)

275)வேலினுக்குஇறை (சூடா. 32)

276)வேலுடைக்கடவுள் (திவா. 7, ஆ. நி. 8)

277)வேள் (திவா. 7, உரி. நி. 13, கயா. 11, சூடா. 31, பொதி.நி. 8, நாமதீப. 32, அபி.மாலை.12, அபி.தனி. 9, நவமணி. 34, சிந்தா. நி 288)

278)வேற்கரன் (பாரதிதீப. 13)

279)வைவேற்கு இறைவன் (அபி.மாலை.12)

## நிறைவாக....

பதினாறு நிகண்டுகள் சொற்கள் தொகுப்பிற்கு எடுத்துக்கொள்ளப்பெற்றன. அவற்றுள் விசாகன், சேய் ஆகிய சொற்கள் 12 நிகண்டுகளில் காணப்படுகிறது. சேந்தன், செவ்வேள், கடம்பன், கார்த்திகேயன் ஆகிய சொற்கள் 11 நிகண்டுகளில் காணப்படுகின்றன. இதனால் இச்சொற்களே முருகனைக் குறிக்க நிகண்டுகள் உருவான காலகட்டங்களில் தொடர்ந்து வழக்கில் இருந்திருக்க வேண்டும் என்பது புலப்படுகிறது.

## சொல் தொகுப்பிற்கு எடுத்துக்கொள்ளப்பெற்றது நிகண்டுகள்

| | | |
|---|---|---|
| • திவாகரம் | – | திவாகர முனிவர் 8ஆம் நூற்றாண்டு |
| • பிங்கலம் | – | பிங்கல முனிவர் 8 ஆம் நூற்றாண்டு |
| • சூடாமணி நிகண்டு | – | மண்டல புருடர் 16 ஆம் நூற்றாண்டு |
| • அகராதி நிகண்டு | – | சிதம்பர ரேவணச் சித்தர் 16 ஆம் நூற்றாண்டு |
| • உரிச்சொல் நிகண்டு | – | காங்கேயர் 17 ஆம் நூற்றாண்டு |
| • கயாதர நிகண்டு | – | கயாதரர் 17 ஆம் நூற்றாண்டு |
| • பாரதி தீபம் | – | திருவேங்கடபாரதி 17–18 ஆம் நூற்றாண்டு |
| • ஆசிரிய நிகண்டு | – | ஆண்டிப்புலவர் 17–18 ஆம் நூற்றாண்டு |
| • பொதிகை நிகண்டு | – | சாமிநாதக் கவிராயர் 18 ஆம் நூற்றாண்டு |
| • நாமதீப நிகண்டு | – | சிவசுப்பிரமணியக் கவிராயர் 18 ஆம் நூற்றாண்டு |
| • நாநார்த்த தீபிகை | – | முத்துசுவாமிப் பிள்ளை 19 ஆம் நூற்றாண்டு |
| • சிந்தாமணி நிகண்டு | – | வைத்தியலிங்கம் பிள்ளை 19 ஆம் நூற்றாண்டு |
| • அபிதான மணிமாலை | – | |
| • அபிதான தனிச்செய்யுள் நிகண்டு | – | கோபாலசாமி நாயகர் 19 ஆம் நூற்றாண்டு |
| • நவமணிக் காரிகை நிகண்டு | –. | அரசஞ்சண்முகனார் 20 ஆம் நூற்றாண்டு |
| • தமிழ் உரிச்சொற் பனுவல் | – | இராம சுப்பிரமணிய நாவலர் 20 ஆம் நூற்றாண்டு |

# நகரத்தாரின் உறவுமுறைப் பெயர்கள்

## (வட்டார வழக்குச் சொற்களின் பங்களிப்பு)

முனைவர் அரு. அபிராமி
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை
சோகா இகெதா கலை மற்றும் அறிவியல்
மகளிர் கல்லூரி, சென்னை -99.



சிவகங்கை மாவட்டம் மற்றும் புதுக்கோட்டை மாவட்டத்தின் 78 ஊர்களைப் பூர்வீகமாகக் கொண்டு வாழும் இனக்குழுவினர்கள் நகரத்தார்கள். அவர்தம் வாழ்வியல் முறையில் காணப்படும் உறவுமுறைப் பெயர்களைப் பற்றி காண்பதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

### நகரத்தாரின் உறவுமுறைப் பெயர்கள்

நகரத்தார் சற்றேக்குறைய 30 ஆண்டுகளுக்குப் முன்பு வரை கூட்டுக் குடும்பங்களாக வாழுகின்ற இயல்புடையவர்களாக இருந்தனர். இன்றைய சூழலில் தனித்தனிக் குடும்பங்களாக வாழ முற்பட்டதன் விளைவாக இவர்களிடையே வழக்கில் இருந்த உறவுமுறைச் சொற்கள் வழக்கிழந்தன. சில இன்றுடன் உயிர்ப்புடன் இருக்கின்றன அவற்றை ஆவணப்படுத்த வேண்டும் என்ற நோக்கிலே இக்கட்டுரை எழுதப்படுகிறது.

1.அண்ணமிண்ட்டி

2.அண்ணன்

3.அத்தை

4.அப்பச்சி

5.அப்பச்சியொண்டி

6.அப்பத்தா

7.அம்மான்

8.அம்மான்மண்டி

9.அய்த்தாண்டி

10.அய்த்தான்

11.ஆச்சி

12.ஆத்தா

13.ஆயா

14.ஐயா

15.சித்தப்பமுண்டி

16.சித்தப்பா

17.தங்கச்சி

18.தம்பி

19.தம்பியொண்டி

20.பாட்டிஆயா

21.பாட்டையா

அகர வரிசையில் இச்சொற்கள் கொடுக்கப்பெற்றுள்ளன.

இதன் விளக்கம் பின்வருமாறு

1.அண்ணமிண்ட்டி

இச்சொல் அண்ணன் + பெண்டு என்னும் சொல்லின் மரூஉ ஆகும். அண்ணனின் மனைவியை அழைக்கின்ற போது இவ்வாறு அழைக்கப்படுகிறது.

2.அண்ணன்

உடன் பிறந்த அல்லது உறவின் முறைக்கு வயதில் மூத்தவரை மட்டுமல்ல தம்மைவிட வயதில் மூத்த நகரத்தார் இனத்து ஆடவரை மரியாதையாகவும் அண்ணன் என்கின்றனர்.

3.அத்தை

அப்பச்சியின் (தந்தையின்) சகோதரி மற்றும் கணவரின் தாய் இவர்களை அழைக்கின்றனர்.

4.அப்பச்சி

தந்தையை அப்பச்சி என்று அழைக்கின்றனர். பிற இனத்தைச் சார்ந்த மக்கள் நகரத்தார் இன ஆடவர்களை அழைக்கும் பொதுச் சொல்லாகவும் வழக்கில் உள்ளது.

5.அப்பச்சியொண்டி

அப்பச்சி+ பெண்டு என்னும் சொல்லே அப்பச்சியொண்டி என்று மருவிற்று. தந்தை மறுமணம் செய்த பெண்ணைப் பிறரிடம் கூறும் போது இவ்வாறு குறிப்பிடுகின்றனர்.

6.அப்பத்தா

அப்பச்சியின் ஆத்தாவை (தந்தையின் தாயை) அப்பத்தா என்று அழைக்கின்றனர்.

7.அம்மான்

ஆத்தாவின் (தாயின்) சகோதரை அம்மான் என அழைக்கின்றனர்.

8.அம்மான்மிண்டி

அம்மான் + பெண்டு என்ற சொல்லே

அம்மான்மிண்டி என்றாயிற்று. மாமி என்றும் அழைக்கின்றனர்

9.அய்த்தாண்டி

அத்தை மகள், அம்மான் மகள், கணவரின் மூத்த சகோதரிகளை அய்த்தாண்டி என அழைக்கின்றனர்.

10.அய்த்தான்

அத்தை மகன், அம்மான் மகனை அய்த்தான் என்கின்றனர்.

11.ஆச்சி

உடன் பிறந்த அல்லது உறவின் முறைக்கு வயதில் மூத்தவரை மட்டுமல்ல தம்மைவிட வயதில் மூத்த நகரத்தார் இனத்து மகளிரை மரியாதையாகவும் ஆச்சி என்கின்றனர். பிற இனத்தைச் சார்ந்த மக்கள் நகரத்தார் இன பெண்களை அழைக்கும் பொதுச் சொல்லாகவும் வழக்கில் உள்ளது.

12.ஆத்தா

தாயை அழைக்கும் சொல்; பொதுவாக பெண் பிள்ளைகளை அழைக்கும் சொல்லாகவும் வழக்கில் உள்ளது.

13.ஆயா

ஆத்தாளின் ஆத்தா(தாயின் தாய்)

14.ஐயா

அப்பச்சியின் அப்பச்சி(அப்பாவின் அப்பா)

ஆத்தாளின் அப்பச்சி (அம்மாவின் அப்பா)

15.சித்தப்பமுண்டி

சித்தப்பன்+பெண்டு என்னும் சொல்லின் மரூஉ. சித்தப்பாவின் மனைவியை இவ்வாறு அழைப்பதில்லை. பிறரிடம் குறிப்பிடும்போது பெரும்பாலும் பயன்படுத்தபடுகிறது

16.சித்தப்பா

அப்பச்சியின் தம்பி

(ஆண்கள் மட்டும்) மாணி என்று அழைக்கும் வழக்கமும் வழக்கில் இருந்தது.

17. தங்கச்சி

உடன் பிறந்த அல்லது உறவின் முறைக்கு வயதில் இளையோளை மட்டுமல்ல தம்மைவிட வயதில் இளைய நகரத்தார் இனத்துப் பெண்களை அழைக்கும் சொல்லாகவும் உள்ளது.

18.தம்பி

உடன் பிறந்த அல்லது உறவின் முறைக்கு வயதில் இளைய வயதுடையவரை மட்டுமல்ல தம்மைவிட வயதில் இளைய நகரத்தார் இனத்து ஆடவரை மரியாதையாகவும் தம்பி என்கின்றனர். அப்பச்சி மகனை விளிகின்ற போதும் தம்பி என்று சொல்கின்றனர்.

19.தம்பியொண்டி

தம்பி+பெண்டு என்னும் சொல்லின் மரூவே ஆகும்.

20.பாட்டி ஆயா

அப்பச்சியின் அப்பத்தாவைப் பாட்டி ஆயா என்று அழைக்கின்றனர்.

21. பாட்டைய்யா

அப்பச்சியின் ஐயாவைப் பாட்டைய்யா என்று அழைக்கின்றனர்.

## நிறைவாக

இன்றைய இளைய தலைமுறையினரிடம் இத்தகைய பண்பாடு சார்ந்த சொற்களைக் கொண்டு சேர்க்க வேண்டிய கடமை நமக்குள்ளது. ஏனெனில், தமிழின் சொற் கருவூலத்திற்கு வட்டார வழக்குச் சொற்களின் பங்களிப்பு இன்றியமையாத ஆகும்.

## துணை நூற் பட்டியல்


• பாரதியார் பாடல்கள், ராமையா பதிப்பகம், 4ஆம் பதிப்பு, சென்னை –14.

• உறவு முறைப் பெயர்கள் பற்றிய தரவுகளைத் தந்துதவியவர் (செவி வழிச்செய்தி) அரு.பழனியப்பன்


## ஒருபொருட் பன்மொழி

**அக்கா**

| | |
|---|---|
| அக்கச்சி | தத்தை |
| அக்காத்தை | தமக்கை |
| அக்காள் | தன்னை |
| அப்பி | தொவை |
| அன்னை | முற்பிறந்தாள் |
| ஆச்சி | முன்னை |



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம்,

எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர், சென்னை–600028

: 044 – 29520509 agarathimalar2020@gmail.com

# பன்னாட்டுத் தர நூல் எண்ணுடன் (ISBN)

## வெளிவரவுள்ள

## அகராதி ஆய்வு மலருக்குக் கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன !

பொருண்மைகள்:

1. அறிவியல் தொழில்நுட்பத்தில் தமிழ்க் கலைச்சொற்கள் 2. கணினிக் கலைச்சொல்லாக்கம் 3. மொழிக்காப்பும் வட்டார வழக்கும் 4. சொல்லாக்கமும் வட்டாரவழக்கும் 5.சொல்லாக்க நெறிமுறைகள் 6. பிறமொழிகளில் தமிழ்ச்சொற்கள் 7. சொற்பிறப்பியல் அகராதிகள் 8. மருத்துவத் துறையில் கலைச்சொற்கள் 9. ஊடகத்துறையில் தமிழ்க் கலைச்சொற்கள் 10.திரைப்படங்களில் இனியவழக்குச் சொற்கள் 11.புலம்பெயர்த் தமிழர்களின் தமிழுணர்வு,தமிழ்ப்பற்று,தமிழ்ச்சொல்லாக்கம் 12. புலம்பெயர்த் தமிழர்களின் கலைச்சொல்லாக்கப் பங்களிப்பு 13.அண்மை புதினங்களில் வட்டார வழக்குச் சொற்கள் ஆகிய தலைப்புகளில் கட்டுரைகளைக் கணினித் தட்டச்சு செய்து மேற்கண்ட இயக்கக மின்னஞ்சலுக்கு 15.08.2022–ஆம் மாலை 5மணிக்குள் அனுப்ப வேண்டும். கட்டுரையினை ஏ4 அளவில் ஐந்து பக்கங்களுக்கு மிகாமல் ஒருங்குறி (யுனிக்கோடு) எழுத்துருவில், எழுத்தளவு11,வரி இடைவெளி 1.5–இல், சொற்செயலிக்கோப்பாக (Word Document file) அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறோம். தேர்வுக்குழுவால் ஏற்பளிக்கப்படும் கட்டுரைகள் மட்டுமே மலரில் இடம்பெறும். முகவரி, தொலைபேசி எண், மின்னஞ்சல் முகவரி, ஒளிப்படம், தன்விளக்கக் குறிப்பு ஆகியவை கட்டாயம் கட்டுரையுடன் இணைத்து அனுப்ப வேண்டும்.

இயக்குநர்

# பன்மொழி அகராதிகள் வெளியீட்டு விழா!



அகராதியியல் முனைவர் பேரா.ச.சச்சிதானந்தம் அவர்கள் எழுதிய, மும்மொழி, நான்மொழி அகராதிகள் வெளியீட்டுவிழா பாரிசில் 17.07.2022 ஆம் நாள் நடைபெற்றது. தமிழ்–ஆங்கிலம் – பிரெஞ்சு ஆகிய மும்மொழிச் சொற்பிறப்பியல் – பழமொழி – மரபுத்தொடர் – சொற் குறுக்குவான்களைக் கொண்டு 1,20,000 சொற்கள் அடங்கிய "சொல் உலகம் – World of WORDS – Monde des MOTS (தொகுதி: 1, 2 ) மற்றும்த மிழ் – ஆங்கிலம் – பிரெஞ்சு – சிங்களம் ஆகிய மொழிகளில் 1,75,000 சொற்கள் அடங்கிய நான்மொழிச் சொல்லகராதியும்(தொகுதி: 1, 2 ) வெளியிடப்பட்டன. விழாவைத் திருமதி ஞானா சச்சிதானந்தம் அவர்கள் தொகுத்து வழங்க, இலங்கைத் தூதுவர் முனைவர் ஆனந்த தேரர் சிறப்பு விருந்தினராகப் பங்கேற்று வெளியிடப்பட்ட அகராதிகள் குறித்து மதிப்புரை வழங்கினார்.பல்துறைசார் அறிஞர்கள், மொழி ஆர்வலர்கள், தமிழ், பிரெஞ்சு, சிங்கள மொழிப் பற்றாளர்கள் பங்கேற்றுச் சிறப்பித்த விழாவின் நிறைவாக நூலாசிரியர் முனைவர், பேரா. ச.சச்சிதானந்தம் நன்றிநவின்றார்.









# நெசவுத் துறை வல்லுநர் குழுக்கூட்டம் (15.07.2022)





சேலம், மாவட்டத்தில் உள்ள மாவட்ட மைய நூலகத்தில் 15.07.2022 ஆம் நாள் முற்பகல் நெசவுத் துறை வல்லுநர் குழுக்கூட்டம் நடைபெற்றது. இந்தத் துறைசார் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டத்தில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் கலந்துகொண்டு நோக்கவுரை வழங்க, சேலம் மாவட்ட நூலக அலுவலர் திருமதி அர.கோகிலவாணி அவர்கள் கலந்துகொண்டு தலைமையுரையாற்றினார். அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் மா.பூங்குன்றன் அவர்கள் கலந்துகொண்டு கருத்துரை வழங்க, சேலம் அரசு மேல்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியர் (பணி நிறைவு) திரு இரா.மோகன்குமார் அவர்கள் நெறியாளுகை செய்ய, சேலம் தொழிற்கல்வி ஆசிரியர் திரு மா.கிருஷ்ணமூர்த்தி அவர்கள் நன்றியுரை கூறினார். இந்நிகழ்வில் சேலம் மாவட்டம் தமிழ் வளர்ச்சித் துறை உதவி இயக்குநர் திருமதி ஜோதி அவர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள். இந்நிகழ்வில் சேலம் நெசவுத் துறை சார்ந்த பல அறிஞர் பெருமக்கள் கலந்துகொண்டார்கள்

# பட்டு வளர்ச்சித் துறை வல்லுநர் குழுக்கூட்டம் (15.07.2022)





சேலம், மாவட்டத்தில் உள்ள பட்டு வளர்ச்சி இயக்குநரகத்தில் 15.07.2022 ஆம் நாள் பிற்பகலில் பட்டு வளர்ச்சித் துறை வல்லுநர் குழுக்கூட்டம் நடைபெற்றது. இந்தத் துறைசார் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டத்தில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் கலந்துகொண்டு நோக்கவுரை வழங்க, சேலம் மாவட்ட பட்டு வளர்ச்சி இயக்கக துணை இயக்குநர் (நிருவாகம்) திரு.ப.சுப்பிரமணியன் அவர்கள் கலந்துகொண்டு தலைமையுரையாற்றினார். அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் தி.பாலசுப்பிரமணியன் அவர்கள் கலந்துகொண்டு கருத்துரை வழங்க, இயக்ககத்தின் தொகுப்பாளர் வே.பிரபு அவர்கள் நெறியாளுகை செய்ய சேலம் மாவட்ட பட்டு வளர்ச்சி இயக்ககத்தின் பட்டு ஆய்வாளர் திருமதி ச.கஸ்தூரி அவர்கள் நன்றியுரை கூறினார். இந்நிகழ்வில் சேலம் மாவட்ட பட்டு வளர்ச்சி இயக்குநரகத்தின் உயரதிகாரிகள் மற்றும் பணியாளர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள்.

# கால்நடைத்துறை வல்லுநர்குழுக் கூட்டம் ! (09.08.2022)







தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், துறைவாரியாக வல்லுநர் குழுக்கூட்டங்கள் நடத்தி, அந்தந்தத் துறைசார்ந்த கலைச்சொற்கள் தொகுக்கப்பட்டு சொற்குவையில் பதிவேற்றம் செய்வதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுவருகின்றன.

அந்தவகையில், 09.08.2022ஆம் நாள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் கால்நடைத் துறை வல்லுநர் குழுக் கூட்டம் நடைபெற்றது. "கலைச் சொல்லாக்கம்" எனும் பொருண்மையில் நடைபெற்ற இக்கூட்டத்திற்கு அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையேற்று நோக்கவுரையாற்றினார். அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் கருத்துரை வழங்கினார். தமிழ்நாடு கால்நடை மருத்துவ அறிவியல் பல்கலைக் கழக மேனாள் பதிவாளரான கலைமாமணி முனைவர் பெரு.மதியழகன் அவர்கள் கால்நடைத்துறைசார்ந்த அறிஞர்களை ஒருங்கிணைப்புச் செய்ததோடு, கலைச்சொற்களை வழங்கி உரையாற்றினார்.

கூட்டத்தில், கால்நடைத் துறையைச் சார்ந்த முனைவர் க. அன்புகுமார், முனைவர் இரா. இரமணி, முனைவர் த.சதீஷ்குமார், முனைவர் து. காவேரி, முனைவர் மோ.ரா. சீனிவாசன், முனைவர் சா. உஷாகுமாரி, முனைவர் செ. இரமேஷ், முனைவர் இரா. சிவசங்கர், மரு. பெ.ஜலந்தா ஆகியோர் கலந்து கொண்டு கால்நடைத்துறை சார்ந்த 500க்கும் மேற்பட்ட ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வழங்கி உரையாற்றினர். இக்கூட்டத்தில் வழங்கப்பட்ட தமிழ்க் கலைச்சொற்களுள் சில :

Aqueous solution– நீர்மக் கரைசல்,
Artificial enzymes – செயற்கை நொதிகள்,
Artificial innoculation – செயற்கையாய்ப் புகுத்தல்,
Biological filter– உயிரி வடிப் புனல்,
Bio reactor – உயிர் வினைக் கலன்,
Blotting – ஒற்றி யுறிஞ்சல் ,
Fermenter – புளிப்பான்,
Micro nutrient – நுண்ணூட்டச் சத்து
Microspores – நுண்துகள் விதைகள்

இயக்ககத் தொகுப்பாளர் முனைவர் வே.கார்த்திக் நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்க, கூட்டத்தின் முடிவில் பதிப்பாசிரியர் முனைவர் தி.பாலசுப்பிரமணியன் நன்றி கூறினார். இதில் திட்ட ஒருங்கிணைப்பாளர் ஜெ.சாந்தி மற்றும் இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் கலந்துகொண்டனர்

# மாணவர்களிடையே கலைச்சொல்லாக்கத்தை ஊக்குவிக்க தமிழ் நுண்பயிலரங்கம்! அகரமுதலி இயக்ககச் சொற்குவையுடன் சவூதி அரேபியா மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கை புரிந்துணர்வு ஒப்பந்தம்!










தமிழ் நுண் பயிலரங்கம் வாயிலாக மாணவர்களிடம் கலைச்சொல்லாக்கச் சிந்தனையை ஊக்குவிக்கும் வகையில், தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககமும் சவூதி அரேபியா மெய்நிகர் தமிழிருக்கையும் புரிந்துணர்வு ஒப்பந்தத்தை மேற்கொண்டுள்ளன.

கலைச்சொல்லாக்கம் என்பது மொழிவளர்ச்சிக்கு முகாமையான ஒன்றாகும். இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முதன்மையான பணியாகும்.

தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித்துறை நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககமானது தமிழ்க் கலைக்கழகம், வல்லுநர்குழுக்கூட்டம், துறைசார் புதிய கலைச்சொற்கள் கலந்தாய்வுக் கூட்டம், இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் உள்ளிட்ட திட்டங்களின்கீழ் கலைச்சொல்லாக்கப் பணியினைத் தொடர்ந்து செயற்படுத்தி வருகிறது. சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டத்தின்கீழ் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டத்தின்கீழ் கல்லூரி மாணவர்களிடையேயும், கலைச்சொல்லாக்கப் போட்டியின்கீழ் பள்ளி மாணவர்களிடையேயும் கலைச்சொல்லாக்கச் சிந்தனையை அகரமுதலி இயக்ககம் விதைத்துவருகிறது.

இந்நிலையில், தமிழ் நுண் பயிலரங்கம் வாயிலாக மாணவர்களிடம் கலைச்சொல்லாக்கச் சிந்தனையை ஊக்குவிக்கும் வகையில், 19.07.2022 ஆம் நாள், தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககமும் மெய்நிகர் தமிழிருக்கையின் முதன்மை அறிவியல் ஆலோசகர் பேரா. மரு. மு. செம்மல் அவர்களின் தலைமையில் செயற்படும் சவூதி அரேபியா மெய்நிகர் தமிழிருக்கையும் புரிந்துணர்வு ஒப்பந்தத்தை மேற்கொண்டுள்ளன.

கணினி கலைச்சொல் களஞ்சிய அகராதி, அறிவியல் கலைச்சொல் களஞ்சியம், அறிவியல் தொழில்நுட்ப கலைச்சொல் களஞ்சிய அகராதி உள்ளிட்ட நூல்களை இயற்றிய நாடறிந்த தமிழறிஞரான மணவை முஸ்தபா அவர்களின் மகனான பேரா. மரு. மு. செம்மல் அவர்கள் தமிழ் நுண் பயிலரங்கின் நோக்கம் பற்றி குறிப்பிடும்போது, தனித்துவமான கட்டமைப்புடன் மாணவர்களிடையே கலைச்சொல்லாக்க அறிவுசார் திறன் வளர்ப்பு முறைமையான இப்பயிரங்கில் ஏழுபேர் பங்குகொள்ள முடியும் என்றும், ஒரு அமர்வானது 40–60 நிமிடங்கள் மட்டுமே நடைபெறும் என்றும், ஒரு நிகழ்வுக்கு ரூ. 150 (ரூபாய் நூற்றியைம்பது) என்ற வகையில், இந்நிகழ்வுகளுக்கான பொருளாதார உதவிகளை ஒரு ரூபாய் அறிவியல் தமிழ் மன்றம் வழங்கும் என்றும் எடுத்துரைத்தார்.

மேலும், மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கை "21ஆம் நூற்றாண்டு தமிழர்களின் அன்றாட வாழ்வியலில் அழகு தமிழ்" நூல்வரிசை திட்டத்தின்கீழ் தொடர்ந்து நூல்களைப் பதிப்பிக்கும். அவற்றினைச் சொற்குவைத் திட்டத்திற்கு இவ்விருக்கை இலவசமாகக் கொடுக்கும் என்றும், நுண் பயிலரங்கம் மூலமாகச் சொற்குவைத் திட்டம் புதிய சொற்களைப் பெறும் முயல்வுகளில் தெரிவாகும் அமர்வுகளுக்கு இவ்விருக்கையும் இதனுடன் தொடர்புடைய இதர அமைப்புகளும் பொருளாதார துணை செய்யும் என்றும், சொற்குவைத் திட்டத்திலிருந்து எந்தவிதமான பொருளாதார எதிர்பார்ப்பையும் இவ்விருக்கையும் இதர அமைப்புகளும் கோராது என்றும் மரு. செம்மல் தெரிவித்தார்.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 114–ஆவது கூட்டம்





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 26.07.2022 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 114–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் சவூதி அரேபியா, மெய்நிகர் தமிழிருக்கையின் முதன்மை அறிவியல் ஆலோசகர் பேரா. மருத்துவர் மு.செம்மல் அவர்கள் சிறப்பு விருந்தினராகக் கலந்துகொண்டார். அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை,திரு.அ.மதிவாணன்,திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு, மற்றும்அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 240 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது. ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:

Actinotherapy –கதிரிய மருத்துவம்
Aerial yoga –வளி ஓகம்
Airbyte –தரவல் தொகுப்பி
Anorexia nervosa –பசியற்ற உளநோய்
App manager –செயலி மேலாளர்
Aspirants–விழையுநர்
Augmented reality –மீநிகர் மெய்ம்மை
Awesome sauce –நறுஞ்சுவைச் சாறு
Blog post –வலைப்பூப் பதிவு
Carnivorous plant –ஊனுண் பயிரி
Depth – sensor –ஆழம் உணரி
Digital justice –எண்மிய நயன்மை
Fast fashion –இற்றைப்புதுமை
Health tracker –நலக்கவனர்
Hospitality staff –விருந்தோம்பல் ஊழியர்
Hypermedia – மீ ஊடகம்
Jumpsuit – காப்புடை

# பன்மொழி அகராதியுடன் தமிழ் கற்பிக்கும் குறுஞ்செயலி



27.07.2022ஆம் நாள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில், தமிழைப் பிறமொழியினருக்குக் கற்பிக்கும் வகையில் திராவிட மொழிகள் உட்பட பிற மொழிகளில் பாடநூல்களும் பன்மொழி அகராதியுடன் தமிழ் கற்பிக்கும் குறுஞ்செயலி வடிவமைப்பு முன்னோட்டக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் கார்க்கி ஆராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் திரு. ச. இராஜபாண்டியன் அவர்கள் பங்கேற்று, செயலியின் வடிவமைப்பு மற்றும் செயலாற்றும்விதம் குறித்து விளக்கியுரைத்ததோடு, செயலியில் இடம்பெறவேண்டிய முகாமையான கூறுகள் குறித்து மொழி வல்லுநர்களிடம் கருத்துகளைக் கேட்டறிந்தார். மேலும் பத்துப் பாடத்திட்டங்கள் பன்மொழி அறிஞர்கள் குழுவில் சீராய்வுச் செய்யப்பட்டன. இவை விரைவில் நூலாக வெளியிடப்படவுள்ளன .

இக்கூட்டத்தில் மொழிபெயர்ப்புத் துறை மேனாள் துணை இயக்குநர் முனைவர் கு.பாலசுப்பிரமணியம் அண்ணாமலை பல்கலைக்கழக மொழியியல் உயராய்வு மைய மேனாள் இயக்குநர் (ம) பேராசிரியர் முனைவர் நீ.இராஜசேகரன் நாயர் சென்னைப் பல்கலைக்கழகக் கன்னடத் துறைத் தலைவர் முனைவர் தமிழ்ச்செல்வி, தெலுங்குத் துறை மேனாள் தலைவர் முனைவர் சம்பத்குமார், இந்தித் துறைப் பேராசிரியர் முனைவர் சரசுவதி, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் மற்றும் இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் பங்கேற்றனர்.

---

சொற்குவை
கட்டணமில்லா அழை மையம் – 14469

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் "சொற்குவை" – கட்டணமில்லா அழை மைய எண்ணான 14469 என்ற எண்ணில் தொடர்புகொண்டு, ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச் சொற்களையும் தமிழ்ச்சொற்களுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும் அறிந்துகொள்ளலாம்.

(குறிப்பு : பணிநாள்களில் காலை 10.00 மணிமுதல் மாலை 5.30 மணிவரை தொடர்புகொள்ளலாம்.)

# விடுதலைநாள் அமுதப் பெருவிழா!






இந்தியத் திருநாட்டின் விடுதலைப் பெருவிழாவைக் கொண்டாடும் வகையில் ஆக.13 முதல் 15–ம் தேதி வரை, ஒவ்வொரு வீட்டிலும் தேசியக் கொடி ஏற்றுமாறு மக்களுக்கு மேதகு பாரத பிரதமர் நரேந்திர மோடி அவர்கள் அழைப்பு விடுத்துள்ளார். நாடு விடுதலை பெற்று 75 ஆண்டுகள் நிறைவு பெறுவதைக் குறிக்கும் வகையில் 'சுதந்திர தின அமுதப் பெருவிழா' (அம்ரித் மஹோத்சவ்) என்ற பெயரில் பல்வேறு செயல்பாடுகளை இந்திய ஒன்றிய அரசு முன்னெடுத்து வருகிறது அதன் ஒரு பகுதியாக, தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் அனைவரும் தத்தம் வீடுகளில் மூவண்ணத் தேசியக்கொடியை ஏற்றுவதற்கேதுவாக அஞ்சலகம் வழியாகத் தேசியக்கொடிகளைப் பெற்று அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் வழங்கினார்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

மொழியின் வளம் காட்டும் அளவுகோல் அதன் சொற்களே ஆகும். அருந்தமிழின் சொல்வளத்தில் காலந்தோறும் கலைச்சொற்கள் இன்றியமையாப் பங்குவகித்துள்ளன. இந்நிலையில், இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 41–45 வரையிலான அமர்வுகள் 2022 சூலை 15, 22, 29, ஆகத்து 05 ஆகிய நாள்களில் நடைபெற்றன. பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களும் மேற்கொண்டனர்.

## 15.07.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**முனைவர் மெய். சித்ரா**

பகுதிநேர விரிவுரையாளர், ஸ்கோப், ஹாங்காங் பல்கலைக்கழகம், ஹாங்காங்



**திரு. குகநேசன்**

நிறுவனர், நிருவாக இயக்குநர், உலகமெலாம் சிவமயம் ஆன்மிகபீடம், பிரான்சு





**முனைவர் வேணுபுருஷோத்தமன்**

மேனாள், தொழுநோய் ஒழிப்புக் கண்காணிப்பாளர், தமிழ்நாடு அரசு பொது சுகாதாரத்துறை, சென்னை

**திருமதி அனிதா ரூத்**

ஆங்கில ஆசிரியை, பிரான்சு



## 22.07.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**முனைவர் மனோன்மணி தேவி அண்ணாமலை**

இணைப்பேராசிரியர், சுலுத்தான் இதுரீசு கல்வியியல் பல்கலைக்கழகம், மலேசியா



**திரு. மணிவேலுப்பிள்ளை**

மொழிபெயர்ப்பாளர், கனடா



**திரு. பா. துவாரகன்**

பொறுப்பு அலுவலர், யாழ்ப்பாண மருத்துவ அருங்காட்சியகம் (ம) தொலை மருத்துவப் பிரிவு, இலங்கை



**முனைவர் இரா. இந்து**

இணைப்பேராசிரியர், அறிவியல் தமிழ் மற்றும் தமிழ்வளர்ச்சித்துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்



**திரு. க.முத்துவிக்னேஷ்**

ஒருங்கிணைப்பாளர், நொதுமி தமிழாய்வு நிறுவனம்



**29.07.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்**



**திரு. வி.இ. குகநாதன்**
எழுத்தாளர், ஒன்றிணைந்த அரசகம்



**திரு. சோமபால விஜயசிங்க**
இலங்கைத் தூதரக மேனாள்
மக்கள் தொடர்பு அதிகாரி, பாரிசு



திரு. ஜி. முஹம்மது அசரப்
பாதுகாவலர், ஏ.எஃப்.பி.ஏ. நிறுவனம்,
பிரான்சு



**முனைவர் ரி. அனில்குமார்**
இயக்குநர், தொலைநிலைக் கல்வி
இயக்ககம், தமிழ்நாடு கால்நடை
மருத்துவ அறிவியல்
பல்கலைக்கழகம், சென்னை



**திரு. க. குழந்தைவேலன்**
மேனாள் உதவி இயக்குநர்,
தொல்லியல்துறை,
சென்னை

**05.08.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்**



**திரு. இங்கர்சால்**
மின்னச்சன், வள்ளவர் வள்ளலார்
வட்டம், நார்வே



**திரு. மணிவேலுப்பிள்ளை**
மொழிபெயர்ப்பாளர், கனடா



**முனைவர் மு.க. அன்வர் பாட்சா**
தமிழக அரசின் திருவள்ளுவர்
விருதாளர்



**முனைவர் அ. ரெஜினா பானு**
தமிழார்வலர், திருப்பத்தூர்



**திரு. வை. கருணைநாதன்**
மொழிபெயர்ப்பாளர், இலங்கை

## அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

**முனைவர் மெய். சித்ரா**

transonic – ஒலிநிகர்
subsonic – குறைஒலிநிகர்
psychoacoustic – ஒலிவுளவியல்

**திரு. குகநேசன்**

மகாசிவராத்திரி – பெருஞ்சிவனிரவு
திருநிலைப்படுத்தல் – பிரதிஷ்டை
உருவேற்றல் – ஆவாகனம்

**வேணுபுருஷோத்தமன்**
Non Secretion – சுரப்பின்மை

Intellectual Personality – அறிவாண்மையர்/ அறிவாற்றலாளர்
Pan Indian Film – அனைத்திந்திய படம்

**முனைவர் மனோன்மணி தேவி**

**அண்ணாமலை**
Water cooler – தண்புனலி
Millennium – பதினூற்றாண்டு
Trigger – எகிறி

**திரு. மணிவேலுப்பிள்ளை**
ambassador – தூதர்
messenger – தூதுவர்
Honorary Consul – உள்ளகத் தூதகர்

**திரு. பா. துவாரகன்**
Triumphalism – வெற்றிவெறி / வெற்றிவேட்கை

Window of Opportunity – பொருத்தமான காலம்,

Hybrid Conference – இணையவழிக் கலந்துரையாடல்

**முனைவர் இரா. இந்து**

bumboat – தனியார் வணிகக் கப்பல்
chip log – கப்பல் வேகக் கணிப்பி,
top off – மீள் சரக்கேற்றல்

**திரு. க.முத்துவிக்னேஷ்**

Non–binary – இருமமிலி
Cloud computing – மீவெளிக் கணினியம்
Sentiment analyzer – உணர்வாய்வி

**திரு. வி.இ. குகநாதன்**

Field Guard – வட்டை வளைத்தல்
single Bullock cart – திருக்கை வண்டில்
Bullock cart with – வில் வண்டில்

**திரு. ஜி. முஹம்மது அசரப்**

Electromynamic – மின்தேற்றம்
Micro – Heristic – நுண்ணறிதல்
Micoeur – Analyser – நுண்கதிராய்வு

**முனைவர் ரி. அனில்குமார்**

Amínion – வளர் கரு உட்சவ்வு
Water bag – பனிக்குடம்
Endometritis – கருப்பை உள் வரி அயர்ச்சி

**திரு. க. குழந்தைவேலன்**

Stabler – துன்னி
Stabler pin. – துன்னூசி
LoudSpeaker – சிலம்பி

**திரு. இங்கர்சால்**

Lurker – நோக்கர்
Dashboard – தகவல் முகப்பு
Linkedin – திறனாளியகம்

**திரு. மணிவேலுப்பிள்ளை**

Fallacy of accent – அழுத்தப் போலி
Fallacy of appeal to Tradition – மரபுப்போலி
Fallacy of distraction – விடைதவிர் போலி

**மு.க. அன்வர் பாட்சா**

Non giving – இவறல்
Disease / illness – ஓவாப்பிணி
Helping Mind – ஒப்புரவு

**முனைவர் அ. ரெஜினா பானு**

Interior Monologue – அகத் தன்னுரை / மறையுரை
Exterior Monologue – புறத் தன்னுரை
Soliloquy – தற்கூற்று / தன்னிலைக் கூற்று

---

## ஆண்பால் பெயர்கள்

"ஏறும் ஏற்றையும் ஒருத்தலும் களிறும்
சேவும் சேவலும் இரலையும் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்
போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பால் பெயரென மொழிப"
(தொல். மர.2)

பொருள் :

ஏறு, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன் என்ற பதினைந்தும் ஆண்பாலைக் குறிக்கும் பெயர்களாகும். பிற என்றதனால் ஆண், விடை போன்ற பெயர்களும் ஆண்பாலைக் குறிக்க வரும்.